ஸ்ரீ:







# ஸ்ரீ ரம்யஜாமாத்ருபத்ய தத்வ விவேசனம்



வானமாமலை

திரு. ஸ்ரீநிவாஸய்யங்காரால்

வெளியிடப்பட்டது.



வ்ருஷ வருஷம் கன்யா புனர்வஸு

1941

ஸ்ரீ:







# ஸ்ரீ ரம்யஜாமாத்ருபத்ய
# தத்வ விவேசனம்



வானமாமலை
திரு. ஸ்ரீநிவாஸய்யங்காரால்
வெளியிடப்பட்டது.



வ்ருஷ வருஷம் கன்யா புனர்வஸு

1941

ஸ்ரீ:

# முன்னுரை

---

ஸ்ரீ ரம்யஜாமாத்ரு பத்ய தத்வ விவேசநம் என்ற இந்த லேகம் இப்பொழுது மத்தியஸ்தர்களான ஸஹ்ருதய சிகாமணிகளுக்கு ஒரு உபஹாரமாக ஸமர்ப்பிக்கப் படுகின்றது. சில மாஸங்களுக்கு முன்னமே அதாவது கோயில்வாஸியான ஸ்ரீமான் ரங்கராஜ அய்யங்கார் "ரம்யஜாமாத்ரு பத்ய விசாரம்" என்ற சுவடியை வெளியிட்டவுடனேயே அதைக் கண்ணுற்ற சில ஸௌஹ்ருத்துக்கள் அதிலுள்ள துர்வாதங்களுக்குப் பதிலுரைத்து ஸ்ரீஸ்வாமி தனியன் விஷயமான உண்மையை எழுதி வெளியிடுமாறு தூண்டினார்கள். ஆனால் அப்பொழுது அடியேனுக்கு அது விஷயமாய் எழுதுவதற்கு மனம் வரவில்லை. ஏனென்றால் இந்நாட்களில் பரிநிஷ்டிதர்களான பண்டிதர்களுங்கூட விஷய விசேஷத்தில் அபிநிவேசத்தாலே सर्वथा व्यवहर्तव्यम् என்ற கணக்கில் நிர்துஷ்டங்களான வாதங்களுக்கும் ப்ரதிவாதங்கள் எழுதத்தலைப்பட்டு ஏதேனுமொரு ப்ரகாரத்தால் புகழ் படைக்க விரும்புவதை நோக்கி நம்முடைய ஸாதுவாதங்களிலும் दोषो ह्यविद्यमानोऽपि तच्चित्तानां प्रकाशते என்ற குமாரிலபட்டர் ஸூக்திப்படி சிலர் தோஷோத்பாவநம் பண்ணி ஏதேனும் சிலவற்றை எழுதி வெளியிட்டு घटानां निर्मातुस्त्रिभुवनविधातुश्च कलहம் போன்ற வீண் சண்டைகளைக் கிளப்பக்கூடுமென்று நினைத்து வாளாவிருப்பதே நமக்கு அடுக்குமென அறுதியிடப்பட்டது. அவ்வாறே நண்பர்களுக்கும் இம்மாதிரியான வாதாபாஸங்களுக்குப் பதில் சொல்லிக்கொண்டிருப்பது அழகன்று என்று சொல்லி ஸமாதாநமளித்து அமைதி நிறுவப்பெற்றது. ஆனால் அந்த விசாரம் வெளிவந்ததோடு நில்லாமல் அதற்குப்பின்னும் ரம்யஜாமாத்ரு

பத்யம் ஸ்ரீசைலபத்யத்தோடு ஸேவிக்கப் படுவதைத் தடுப்பதற்கென்றே தோன்றியதும் முன் சொன்ன விசாரக்காரரால் கைவிடப்பட்டதுமான ஸ்ரீசைலேசாஷ்டகத்துக்கு வ்யாக்யானமும் அதற்கு ஸமாதானமும் ஒன்றன்பின் ஒன்ருக வெளிவரா நின்றுகொண்டு இப்பத்யத்தை ஸேவித்துவரும் பலருடைய மனஸ்ஸுக்களிலும் ஸ்வாநுஷ்டானத்தில் அப்ராமாண்ய சங்கை உதிக்கும்படி வேலைசெய்து வருவதைப்பார்த்து இனியும் இப்பத்யத்தின் உண்மை நிலையைத் தெரிவித்துப் பிறர் கூற்றுக்களுக்குப் பதிலளிக்காமலிருப்பது அவத்யாவஹ மாகுமெனக் கருதி கற்ருேர்கள் தாமுகப்பரென்ற பாசுரத்தின்படியே ஒருவாறு உள்ளம்தேறி இப்பொழுது இதை எழுதிப்ரகாசிப்பிக்கலாயிற்று. இனி இதற்கு மறுப்புரைகள் எவ்வளவேனும் வந்திடுக, அவற்றையெல்லாம் அன்புடன் வரவேற்றுப் பல்கோடி நூறுயிரமாகத் தக்க பதிலளிக்க ஸித்தனுயிருக்கின்றேன். அல்லது ப்ராமாணிகமான விஷயங்களில் வேண்டாத வாதங்களை வளர்த்து வறும் பொழுது போக்குவது தகாதென ஆரெண்ணும் நெஞ்சுடையாரவரெம்மை யாள்வாரென்றிருப்பன். எவ்விதத்திலும் இதைக் கடாக்ஷிக்குமவர்கள் பரமோபகாரர்களென்றே அடியேன் கருதுகின்றனன். **सन्तु सन्तः प्रमाणम् ।**



    

॥ श्रीः ॥

॥ श्रीमते रामानुजाय नमः ॥

॥ श्रीवानमहाचलगुरुभ्यो नमः ॥

## ॥ श्री रम्यजामातृपद्यतत्वविवेचनम् ॥

# ஸ்ரீ ரம்யஜாமாத்ருத்தனியனின் உண்மை விளக்கம்

श्रीशैलेशदयापात्रं धीभक्त्यादिगुणार्णवम् ।
यतीन्द्रप्रवणं वन्दे रम्यजामातरं मुनिम् ॥
रम्यजामातृयोगीन्द्र पादरेखामयं सदा ।
तदायत्तात्मसत्तादिं रामानुजमुनिं भजे ॥

இவற்றில் முதலாவது பத்யம் ஸ்ரீ மணவாள மாமுனிகளின் தனியன். ஸ்ரீ ரங்கநாதனால் அருளிச்செய்யப்பட்டது. திருவரங்கம் பெரிய கோயில் என்று பெயர்பெற்ற ஸ்ரீரங்கத்தில் மாமுனிகள் எழுந்தருளியிருக்கும் நல்லடிக்காலத்தில் 'காலாயிர முடியாயிரமாயிரங்கை பரப்பி மேலாயிரந்தலைநாகங் கவிப்ப விண் பூத்த கஞ்சம்போலாயிரங்கண் வளரும் பிரா'னாகிய பொன்னரங்கன் தென்னன் குருகூர்ச் சடகோபனது ஏற்கும் பெரும் புகழாயிரமாய் இன்பக்கவியாகிய திருவாய்மொழிக்கு வ்யாக்யானமாக நம்பிள்ளை அருளிச்செய்த ஈடு முப்பத்தாறாயிரம் முதலான உரைகளைத் தான், ஸகல மஹிஷீ பரிவாரங்களுடனும் கோயில் பரிகரமனைத்துக் கொத்துடனும் கூட வெழுந்தருளியிருந்து அவரிடம் அடைவே கேட்டருளி உளங்கனிந்து வருஷ முடிவில் சாற்று முறையானதும் அக்கோஷ்டியில் தனது ஶிஷ்யத்வத்தை உலகோருக்கு உணர்த்தும் பொருட்டு அவருக்குத் தானேயொரு தனியனைத் திருவுள்ளமாகி ஐந்து வயதுள்ள ஒரு அர்ச்சககுமாரனிடம் ஆவேசித்து அருளிச்செய்ததாகும்.

இரண்டாவது ஶ்லோகம் ஒன்றான வானமாமலை ராமாநுஜ ஜீயர் ஸ்வாமியின் தனியன். அவருடைய அஷ்டதிக்கஜாசார்யர்களில் ஒருவராய் தொட்டையாசார்யரென்று ப்ரஸித்திபெற்று விளங்கிய மஹாசார்யர் அருளிச்செய்தது. மணவாளமாமுனிகளின் விஷயமாக ஸ்ரீஶைலேஶ தனியன் அவதரித்த பிற்பாடு ஒரு நாள் காலக்ஷேபம் ஆனதும் அவ்வோலக்கத்தில் ஸ்ரீஸ்வாமி தமது அந்தரங்க ஶிஷ்யர்களுடன் மாமுனிகளை ஸேவித்துக் கொண்டு செவிவாயில் த்வநித்துக்கொண்டிருக்கின்ற அவரது ஸ்ரீஸூக்திகளின் மாதுர்யத்தை ஸாத்மிக்கும்படிச் சிறிது சிறிதாக உள்ளத்தில் புகட்டுபவர்போலச் சிந்தித்து அகமகிழ்ந்திருக்கும்போது மாமுனிகள் மஹாசார்யரை நோக்கி உம்முடைய ப்ரேம பந்தத்துக்கு அநுகுணமாக உமது ஆசார்யர் விஷயமாக ஒன்று சொல்லிக்காணீரென்று நியமித்தருள அவரும் தம் பரமாசார்யருடைய நியமனத்தைத் தலையாலேற்று ஹர்ஷ பரவசராய் இத்தனியனை யருளிச்செய்தாரென்பது ப்ரஸித்தம். அப்படி இது அவதரிக்கும்போது ஒரே கண்டம்போலத் தோன்றியது ஸ்ரீ ரங்கநாதனின் திருவுள்ளக் கருத்துக்கு இசைந்திருப்பதை நோக்கி மணவாளமாமுனிகள் முதலிகளைப் பார்த்து 'முன் கருட மண்டபத்தில் மூன்று கண்டங்களாக அரங்கனால் அருளப்பட்ட ஸ்ரீஶைலேஶ தனியனோடு சேர்ந்து இது அதற்கு நான்காவது கண்டமாகப் பெறுவதால் இவ்விரண்டு தனியன்களையும் சேர்த்து நான்கு கண்டங்களுடன் கூடின ஒரு ஶ்லோகத்தின் ஸ்தாநத்திலே திருப்பல்லாண்டின் முதலிரண்டு பாட்டுக்கள்போலவும், ஸ்ரீ வராஹசரமம்போலவும், மந்த்ரரத்னமான த்வயம் போலவும் ஒரே மந்த்ரமாய் எப்பொழுதும் சேர்ந்தே அநுஸந்திக்கப்படவேணு' மென்று நியமித்ததும் ஸுப்ரஸித்தம்.

திருவரங்கன் ஸ்ரீசைலேச தனியனை யருளிச் செய்யும்போது **श्रीशैलेशदयापात्रम्** என்றும் **धीभक्त्यादिगुणार्णवम्** என்றும் **यतीन्द्रप्रवणं वन्दे रम्यजामातरं मुनिम्** என்றும் மூன்று கண்டங்களாக அருளிச்செய்தானென்பது யதீந்த்ர ப்ரவண ப்ரபாவ க்ரமத்தில் காணக்கிடக்கின்றது. அவ்விதம் த்ரிகண்டமாகச் சொன்னவனுக்கு நான்காவது கண்டம் ஒன்று அத்துடன் சேர்க்கப்படவேணு மென்பதன்றோ அபிப்ராயமாகவேணும். அப்படி

யில்லாத பக்ஷத்தில் அப்பத்யத்திலுள்ள முன்னிரண்டு பாதங்களைப்போலப் பின்னிரண்டு பாதங்களையும் தனித்தனியே இரண்டு கண்டங்களாக வருளியிருப்பானன்றோ. ஆனால் அவ்விதம் இரண்டு கண்டங்களாக, அதாவது வெவ்வேறு நிறுத்தாகச் சொல்லத் தனக்கு விருப்பமிருந்தும் அச்சிறு குழந்தை ஸபா கம்பத்தாலே அவஸரமாகச் சேர்த்துச் சொல்லிவிட்டது போலும்; ஆகையினாலேயே அக்குழந்தை ஓடிவிட்டதென்றிருப்பதையும் காண்க; என்று சொல்வதற்கிடமில்லை. ஏனென்றால் அந்தப் பாலன் ஸபைக்கு நடுங்குமவனில்லை. **हटाद्बालः कश्चित्कुत इति निरस्तोऽप्युपगतः** என்று "அப்பாலேபிடித்து, விடவிடத்திரும்பி வந்துநின்றுநிர்பயமாகச்சொன்னான்" என்றிறே அவ்விஷயத்தில் பெரியோர்கள் கூறுவது, ஆகிலவன் ஓடுவானேன்? என்பீரேல், அதற்குக் காரணம் வேறு கேண்மின். அந்த ஶ்லோகத்தை முடிக்கும்வரைப் பெருமாள் அவனிடம் ஆவேஶித்திருந்தமையால் நிர்ப்பயனாக இருந்தான். ஶ்லோகம் முடிந்ததும் தானான தன்மை அவனுக்கு ஏற்பட்டுவிட்டபடியால் அங்கு நிற்கத் துணியாது ஓடிவிடவமையும். ஆகையால் ஶ்லோகம் சொல்லும்போது பயத்துக்கு ப்ரஸக்தியே இல்லை. அது முடிந்ததும் அவனுக்குத் தன் நிலைமை ஏற்பட்டமைக்குப் பின்னுமொருக்காலக்குழந்தையை உபலாளித் தழைத்து முன் சொன்னதை இன்னுமொருமுறை சொல்லுமென்று கேட்கும்போது அது நானென்றுமறியேனென்று சொன்னது தக்க சான்றாகும். ஆகையால் அந்த ஶ்லோகம் மூன்று கண்டங்களாக அவதரித்தது ஸபாகம்பத்தினால் வந்த தடுமாற்றத்தினாலில்லை. வக்தாவினுடைய கருத்தை அநுஸரித்தேதான் அவ்விதம் தோன்றிற்றென்பது தேறுகின்றது.

இங்கு, ஒரு ஶ்லோகமாகில் அது நான்கு கண்டங்களாகத்தான் ஓதப்படவேண்டுமென்று என்ன நிர்ப்பந்தம். மூன்று நிறுத்தாகச் சொன்னால் என்ன குறை வந்திட்டதென்று ஒருவர் நினைப்பரேல் அது முற்றிலும் அநுபவத்துக்கு ஒவ்வாததாகும். உலகில் பாலர் முதல் பண்டிதர்கள் ஈறாக ஒரு ஶ்லோகத்தைச் சொல்லும்போது அதன் நான்கு பாதங்களையும் தனித்தனியே நாலு கண்டங்களாகவன்றோ சொல்லுகின்றார்கள். ஒரு ஸமயம் அவஸரத்தில் சொல்லும்போது ஒவ்வொரு பாதியையும் ஒவ்வொரு கண்டமாகச் சொல்லுகிறார்களேயொழிய இரண்டு பாதங்

களைச் சேராமல் தனியாகவும் இரண்டு பாதங்களைச் சேர்த்தும் ஒருவரும் சொல்கின்றிலர். ரொம்பவும் அவஸரத்தில் ஶ்லோகம் முழுவதையும் ஒரே மூச்சாகச்சொல்வது காணக்கிடந்தாலும் மூன்று நிறுத்தாகச் சொல்வது காணவரிது. அரங்கன் இவ்வுலக வழக்கை யறியாதவனன்றே. ஆகையால் **यतीन्द्रप्रवणं** என்று துடங்கும் மேற்பாதியை இரண்டு கண்டங்களாகச் சொல்ல வேண்டுமவன் அவ்விதம் சொல்லாமல் ஒரே கண்டமாகச் சொன்னதிலிருந்து நான்காவது கண்டமாக வேறொன்று சேர்க்கப்பட வேண்டுமென்றும் அவ்விதம் சேர்க்கப்படாதபோது இப்பத்யம் பூர்ணமாகமாட்டாதென்றுமே அவனது திருவுள்ள மென்பது வ்யக்தமாகின்றது அல்லவா.

ஆனால் இப்பொழுதும் இரண்டு கண்டங்கள் **पाद** ரூபமாகவும் ஒன்று **अर्घ** ரூபமாகவும் நான்காவது **श्लोक** ரூபமாகவும் விதிப்பதால் கண்டங்களுக்குள் ஸாம்யமில்லையே. இப்படி உலக வழக்கத்துக்கு மாறாக ஸமமாகவில்லாத கண்டங்களை ஸர்வஜ்ஞன் பணிப்பது யுக்தமாவென்று நினைக்கவொண்ணாது. ஸாம்யம் பெறவேண்டி இரு ஶ்லோகங்களின் **अर्घ**ங்களையும் நான்கு கண்டங்களாகக் கருதி முதலில்தான் **श्रीशैलेश** பத்யத்தின் இரு **अर्घ**ங்களையும் இரு கண்டங்களாக வருளிச்செய்துவிட்டு **रम्यजामातृ** பத்யத்தின் இரண்டு **अर्घ**ங்களையும் அதனோடு சேர்த்து நான்கு கண்டங்கள் கொண்ட ஒரு ஶ்லோகரூபமான மந்த்ர மாகத் தோன்றும்படி வைத்திருப்பானேல் அப்பொழுது பூர்ண மான ஒரு ஶ்லோகத்தை **अर्घ** ரூபமான இரு கண்டங்களாகச் சொல்வதும் உலக வியலாகையாலும் நான்கு கண்டங்களாகவே தான் ஒரு ஸம்பூர்ண பத்யம் ஓதப்பட வேண்டுமென்ற நியம மில்லாமையாலும் **अर्घ** வடிவமான இரு கண்டங்கள் கொண்ட **श्रीशैलेशपद्य** மே ஸம்பூர்ணமென்று கருதப்பட்டு அத்துடன் வேறு பத்யம் ஏகமந்த்ரமாகச் சேர்க்கப்பட வழியில்லாமற் போய்விடுமென்றுணர்ந்து அது சேர்க்கப்படுமாறு முன்சொன்ன படி ஸமமில்லாத மூன்று கண்டங்களாக **श्रीशैलेश** பத்யத்தை அவன் அருளிச்செய்தது அத்யந்தம் யுக்தமேயாகும். மூன்று கண்டங்களாக ஒரு பூர்ண ஶ்லோகத்தைச் சொல்வது உலக வழக்கல்லாமையால் இப்பொழுது அப்பத்யத்தின் அபூர்த்தி அவசியம் தோன்றியே நிற்குமன்றோ.

மேலும் எழுத்துக்களின் கணக்குப்படி இந்நான்கு கண்டங்களும் அனேகமாக ஒன்றுக்கொன்று விஷமங்களேயானாலும் இவைகளிற் சொல்லப்படும் அர்த்தங்களின் ஸ்வபாவத்தை ஆலோசிக்குங்கால் அவ்வழியாலே இவை நான்கும் ஸமங்களே யென்று சொல்லத்தட்டில்லை. இவ்விரண்டு பத்யங்களாலும் சேர்ந்து சொல்லப்படும் ஒரு மஹா வாக்யார்த்தத்தினுடைய கண்ட வாக்யார்த்தங்கள் நான்கையும் இந்நான்கு கண்டங்களும் சொல்லுகின்றனவாகும். அஃதெவ்வாறெனில் — ஸ்வாசார்ய க்ருபாலப்த ஜ்ஞாநாதிபலபூத ஸதாசார்ய நிஷ்டையையுடைய வரவர முனிகளின் பக்கல் அவரது சேஷபூதர்களுடைய விருத்தி யானது இவ்விரண்டு ஶ்லோகங்களுக்கும் சேர்ந்து மஹா வாக்யார்த்தமாகும். ஆகையால் **अर्थैकत्वादेकं वाक्यं साकाङ्क्षं चेद्विभागे स्यात्** என்ற பூர்வமீமாம்ஸாந்யாயப்படி இவ்விரண்டு பத்யங்களும் சேர்ந்து ஏகவாக்யரூபமான ஏகமந்த்ரமாகின்றன. இவ்வர்த்தத்தில் நாலு அவாந்தர வாக்யார்த்தங்கள் உள. அவற்றில் ஸகல புருஷார்த்த லாபத்துக்கும் அடிப்படையான ஆசார்ய விஷயீகாரம் அதாவது திருவாய்மொழிப் பிள்ளையுடைய நிர்ஹேதுக க்ருபைக்கு மாமுனிகள் இலக்கானமை முதலர்த்தம். இதைச்சொல்வது **श्रीशैलेशदयापात्रं** என்ற முதல் கண்டம். அதடியாகவந்த ஞாநாதி பரிபூர்த்தியாகிய இரண்டாவது அர்த்தத்தைப் பேசுவது **धीभक्त्यादिगुणार्णवम्** என்ற இரண்டாவது கண்டம். அதன் பலமாக ஸித்தித்த ஸர்வாசார்யாவயவிபூதரான எம்பெருமானார் திறத்தில் மாமுனிகளின் ப்ராவண்யமாகிற ஸதாசார்ய நிஷ்டையென்ற மூன்றுமர்த்தத்தை மொழிவது **यतीन्द्रप्रवणं वन्दे रम्यजामातरं मुनिम्** என்ற மூன்றும் கண்டம். இவ்விதம் ஸர்வோத்க்ருஷ்டராய் விளங்காநின்ற மாமுனிகளின் குணகணங்களில் ஈடுபட்டு அவரை விட்டு இறையுமகலகில்லாது அவரது பாதரேகா ரூபியாய் அவருக்கே அதீனமான தன் ஸத்தா ஸ்திதிகதிகளை யுடையவராய் எழுந்தருளியிருந்த ஒன்றான வான மாமலை ஸ்வாமியை த்யானிப்பதாகிய அவரது சேஷபூதர்களின் வ்ருத்தியென்ற நான்காவது அர்த்தத்தை **रम्यजामातृ योगीन्द्र पादरेखामयं सदा। तदायत्तात्मसत्तादिं रामानुजमुनिं भजे॥** என்ற ஸ்ரீ ஸ்வாமிதனியனாகிய நான்காவது கண்டம் வெளியிடுகின்றது இவ்விதம் ஒவ்வொரு கண்டத்துக்கும் க்ரமப்ராப்தமான ஒவ்

வொரு அர்த்தவிசேஷ மிருப்பதால் இந்நான்கு கண்டங்களும் தம்மில் ஸமமானவைகளே யென்னக் குறையில்லை. ஆனால், இவற்றில் மூன்றுவது கண்டத்தில் மாமுனிகளை வணங்குவதாகிய சேஷபூதரின் வ்ருத்தியும் சொல்லப்பட்டிருப்பதால் அது உடையவரிடத்தில் மாமுனிகளுக்குள்ள ப்ராவண்யத்தை மட்டும் சொல்லுகின்றதென்றும் வானமாமலை ஸ்வாமியை த்யானிப்பதாகிய நான்காவது கண்டத்தின் பொருளே மாமுனிகளின் சேஷபூதரின் வ்ருத்தியென்றும் கொள்வது எவ்வாறு தகுமெனில் கேண்மின். ஒவ்வொரு விஷயத்திலும் அதன் சரமபர்வ பர்யந்தமான தாஸ்யமே பரிபூர்ணமான சேஷவ்ருத்தி யென்பது சாஸ்த்ரானுஷ்டான ஸித்தமாகையாலே மாமுனிகள் திறத்தில் மட்டும் செய்யப்படும் வந்தனம் முதலியவை அபரிபூர்ணமாகையாலே அவரது பாத விஷயமாகவும் அதிலும் பாதத்துக்கும் அந்தரங்கமான பாதரேகா ரூபியான ஸ்ரீஸ்வாமி விஷயமாகவும் செய்யப்படுமவையே பரிபூர்ண சேஷவ்ருத்தியாகையாலே மூன்றுவது கண்டத்தில் அவ்வளவான அர்த்தம் ப்ரதிபாதிக்கப் படாமையாலே அதற்கு எம்பெருமானர் பக்கலில் மாமுனிகளின் ப்ராவண்யத்தைச் சொல்வதிலேயே நோக்கென்றும் அவர் விஷயமான பரிபூர்ண சேஷ வ்ருத்தியைச் சொல்வது நான்காவது கண்டமேதானென்றும் கொள்வது மிகவும் உசிதமன்றோ.

நிற்க, இங்கு இவ்விதம் நாலு கண்டங்களமைந்த இவ்விரண்டு பத்யங்களும் சேர்ந்தேதான் ஒரு பரிபூர்ணமான மந்த்ரமாகின்றதென்று கொள்ளில் ஸ்ரீசைலேச பத்யத்தை அருளிச்செய்யும் பொழுதே ஸர்வஜ்ஞனாய் ஸர்வசக்தனான வரங்கன் இந்த ரம்ய ஜாமாத்ரு பத்யத்தையும் அருளியிருக்கலாமே. அப்படியிருக்க இந்த நான்காவது கண்டத்தைச் சேர்க்காமல் அபூர்ணமான ஒரு மந்த்ரத்தை வெளியிட்டுத் தான் மேற்கொண்ட கார்யத்தைக் குறைவுபடச் செய்வது அழகியமணவாளனுக்கு அழகியதோ? என்று வினவுவீரேல் அந்த ஸ்ரீசைலேசத்தனியன் அவதரித்த ஸந்தர்ப்பம் இத்தனியனையும் சேர்த்துப் பணிக்கப் பொருந்தாததென்று உணர்ந்து தெளிக. மாமுனிகளிடம் பகவத் விஷயார்த்தங்கள் கேட்டு அந்த உபகார ஸ்ம்ருதி கார்யமாகச் செய்யப்படும் தனியன் அவர் விஷயத்தோடுமட்டும் நிற்ப

தன்றோ உசிதம். ஸ்ரீஸ்வாமி அவருக்குப் பாதரேகாரூபியாக விருந்தாலும் ஸ்ரீஸ்வாமி விஷயத்தில் செய்யப்படும் பஜனமும் அவருக்கே அதிசயத்தை விளைவிப்பதாக விருந்தாலும் ஸ்ரீஸ்வாமியும் அவரோபாதி காலக்ஷேபம் ஸாதிக்க வல்லராகையாலே ஸ்ரீஸ்வாமியிடம் காலக்ஷேபம் கேட்டு அந்த உபகார ஸ்ம்ருதியாலே அவருக்குத் தனியன் பணிப்பது தகுந்ததெனக் கருதி அது வேறொரு ஸமயத்துக்கு ஒதுக்கிவைக்கப்பட்டதத்தனையாம்.

ஆனால் அந்த ஸமயாந்தரத்திலும் ஸர்வ ஸாக்ஷியான அரங்கன் தானே இந்த ரம்யஜாமாத்ருத் தனியனையும் அருளிச்செய்து தான் கைக்கொண்ட கார்யத்தை முடிப்பதன்றோ பொருத்தமுடைத்து, எனில் விலக்ஷண விஷயங்களில் அந்த நியமமில்லை. இந்த ஶ்லோகத்வய ரூபமான ஸம்பூர்ண மந்த்ரத்தை முற்றிலும் தானே வெளியிட்டு அப்பெரும் புகழைத் தானொருவனே படைப்பதைவிட **एकः स्वादु न भुञ्जीत** என்ற ந்யாயத்தாலே ஸகல சாஸ்த்ரபாரங்கதராய் ஜ்ஞாநாநுஷ்டானங்களாலே ஒப்புயர்வற்று விளங்குமவராய் அவ்வழியாலே **ज्ञानी त्वात्मैव मे मतम्** என்ற கட்டளைப்படி தனக்கு அத்யந்தப்ரியராய் ஸ்ரீஸ்வாமியைத் தவிரத் தேவுமற்றறியாதிருந்தும் அவருகந்த விஷயமெனக் கருதித் தம்மையே நாளும் வணங்கித் தொழுமவரான மஹாசார்யருக்கும் அம்மந்த்ரத்ரஷ்ட்ருத்வத்தில் பாகம் கொடுத்துத் தம்மையே யொக்கவருள் செய்ய வெண்ணி அரங்கன் அழகிய மணவாளமாமுனி ரூபத்துடன் அவரைநோக்கி ஸ்ரீஸ்வாமி விஷயமாகத்தனியன் விண்ணப்பிக்குமாறு கட்டளையிட்டது மிகப்பொருத்தமுடையதன்றோ. இவ்விதம் உதாரஸ்வபாவராயிருப்பாரொருவர் தமக்குவந்த உயர்த்தியை தம் அபிமதர்களுக்கும் பகிர்ந்து கொடுப்பதைப் பலகாலும் காண்கிறோம். வேதார்த்தவிசாரம் செய்யப்புகுந்த ஸ்ரீ வேதவ்யாஸ பகவான் தனது சிஷ்யராகிய ஜைமினி முனிவரையிட்டுப் பூர்வ பாகார்த்த விசாரத்தை ப்ரவர்த்திப்பித்து த்தான் உத்தர பாகார்த்த விசாரத்தைச் செய்தானிறே. வேறிடம் போவானேன். நமது மாமுனிகளே ஒருக்கால் முதலியாண்டான் திருவம்சத்தவரெல்லாரும் திரளாகத்தம்மிடம் ஆஶ்ரயிக்கவெழுந்தருளினபோது பெரியகந்தாடையண்ணனுக்குத் தாம் பஞ்சஸம்ஸ்காரங்களை ஸாதித்தருளி

அத்திருவம்சத்தில் ஸம்பந்தம் பெறுவதால் வரும் ஏற்றத்தைத் தமக்கு அத்யந்தம் ப்ரியரான ஸ்ரீஸ்வாமிக்கும் கொடுத்தருள வெண்ணி மற்றையோருக்குத் திருவிலச்சினை ஸாதித்தருளும்படி ஸ்ரீஸ்வாமியை நியமித்தாரென்பது உலகமறிந்ததே. ஆகையால் மஹாசார்யரை இக்கைங்கர்யத்தில் ப்ரவர்த்திப்பித்தது மிகவும் யுக்தமாகக்கடவது. மேலும் அவர் ஸ்ரீஸ்வாமி ஸ்ந்நிதியில் பகவத் விஷயாதிச்ரவணம் செய்யப்பெற்றவராகையாலே அவர் முகமாகப்ரவர்த்திப்பித்தாலேயிறே. இத்தனியன் உபகார ஸ்ம்ருதி கார்யமாக வடுக்கும். ஆனதுபற்றியே **शठारिगाधार्थसुधां महार्यस्तस्मान्मुनेःसंपरिपीय हृष्टः। व्यधत्त पद्यं वरयोगिपादरेखामयस्यास्य मुने र्महार्थम्॥** என்று ஸமரபுங்கவாசார்யர் பணித்தது.

ஆனால் இருவரால் செய்யப்பட்ட இரண்டு ஸ்லோகங்கள்எவ்வாறு ஏகமந்த்ரமாகும். திருப்பல்லாண்டோ ஸ்ரீவராஹசரமம் முதலியதோ அவ்வாறில்லையேயெனில் ஏகமந்த்ரமாயிருக்கின்ற வாக்ய த்வயங்களெல்லாம் ஒருவராலேயே பணிக்கப்பட்டிருக்க வேணுமென்ற நியமமில்லை. சிஷ்யாசார்யர்களால் செய்யப்பட்டிருக்கும் பூர்வோத்தரபாக விசாரங்கள் சேர்ந்து மீமாம்ஸா சாஸ்த்ரமென்ற ஒரே க்ரந்தமானாற் போலவும் வெவ்வேறு கவிகளாற்செய்யப்பட்ட பூர்வபாகோத்தரபாகங்கள் சேர்ந்து காதம்பரீயென்ற ஒரே காவ்யமானாற் போலவும் அரங்கனாலும் மஹாசார்யராலும் அருளப்பட்ட இவ்விரு ஸ்லோகங்களும் சேர்ந்து ஒரு மந்த்ரமாகத் தட்டில்லையே. **तच्चोदकेषु मन्त्राख्या** என்ற பூர்வ மீமாம்ஸாஸூத்ரத்திலும் அத்யேதாக்களுடைய மந்த்ரத்வப்ரஸித்தியே மந்த்ரங்களுக்கு லக்ஷணமென்று சொல்லப்பட்டிருக்கிறதேயன்றி **एकद्रष्टृकत्वं** அதாவது ஒருவரால் காணப்பட்டமை போன்றவை அந்த லக்ஷணத்தில் சேர்க்கப்படவில்லை. திருப்பல்லாண்டு முதலிய முன்சொன்ன த்ருஷ்டாந்தங்களில் அவ்வோ வக்தாக்களுக்கு அபிஸந்தியில்லாமையாலே வேறொரு வக்தா சேர்க்கப்படவில்லையத்தனையேயாம். அங்குப வக்தாவுக்கு அபிப்பிராயமிருந்து வேறொருவர் சேர்க்கப்பட்டிருந்தாலும் யாதொரு குறையும் வந்திடாது. ப்ரக்ருதத்தில் வக்தாவாகியவரங்கனுக்கு இன்னுமொருவரைத் தம்முடன் சேர்த்துக் கொள்ளவேணுமென்ற அபிஸந்தியேற்பட்டமை முன் தெரிவிக்கப்பட்டது. ஆகையாலிவ் விரண்டு தனியன்களு

சேர்ந்து ஒரே மந்திரமென்று கொள்வதற்கு யாதொரு விரோதமுமில்லை.

இங்கு ஸ்ரீசைலேசத் தனியனை அருளியவரங்கனுக்கு ரம்யஜாமாத்ருத் தனியனும் அபிமதமேயென்று வைத்துக் கொண்டாலும் எல்லா திவ்ய தேசங்களிலும் அருளிச்செயல் துடங்கும்போது ஸ்ரீசைலேசத்தனியனை அநுஸந்தித்துத் துடங்கவும் சாற்றும்போது 'வாழி திருவாய்மொழிப் பிள்ளை' முதலாக 'இன்னுமொரு நூற்றாண்டிரு' மென்றும் ஈறாக அநுஸந்தித்துத் தலைக்கட்டவும் என்று அவன் கட்டளையாக அனுப்பப்பட்ட ஸேனைமுதலியாரின் ஸ்ரீமுகத்தில் இந்த ரம்யஜாமாத்ருத்தனியனைப் பற்றிய பேச்சே இல்லாமலிருக்கும்பொழுது ஸ்ரீசைலேச பத்யத்துடன் இதன் அநுஸந்தாநம் எங்குமொக்க எங்ஙனே ப்ராப்தமாகக் கடவது? என்று ஒரு கேள்வி பிறக்கலாகும். இதற்கு, ஸ்ரீசைலேசபத்யத்தின் அநுஸந்தான விஷயமான கட்டளையானது அதனுடன் ஏகவாக்யமாகவிருக்கும் இத்தனியனுக்கும் ஒக்குமென்ற ஸமாதானமிருப்பினும் வேறு தக்கவிடையும் உள்ளது காண்மின். அதாவது அந்த ஸ்ரீமுக மூலமான உத்தரவு ஸ்ரீசைலேசத்தனியனும் மாமுனிகளின் வாழித்திருநாமம் சீர்களும் அவதரித்தவுடனேயே பிறப்பிக்கப் பட்டுவிட்டபடியால் அப்பொழுது ரம்யஜாமாத்ருத்தனியன் பிறந்திராமையாலே இஃது அக்கட்டளையிற் சேர்க்கப்படவில்லை. ஆகையால் இது பிறந்த பின்பு மணவாளமாமுனிகளின் ஆஜ்ஞையை அநுஸரித்து இது ஸேவிக்கப்பட்டு வருகிறது. இதை முன் கட்டளையிலில்லாமை எவ்வாறு தடுக்கவல்லது. ஆனாலும் அக்கட்டளைக்குட் படாத எதை ஸேவிப்பதாயிருந்தாலும் அது ப்ராமாணிகாநுஷ்டானமாகாது என்பீரேல் அப்போது அருளிச்செயல்சாற்றும்போது **सर्वदेशदशाकालेषु** என்றுதொடங்கி **श्रीशैलेश** பத்யமளவாக ஸேவிப்பதும் அக்கட்டளையிற் கூறப்படாமையால் அப்ராமாணிகமென்றன்றோ பர்யவஸிக்கும். ஆகையால் ஸம்ப்ரதிபந்நப்ரமாணஸித்தமான ஆசாரங்களைத் தப்பென்று சொல்வது அதிஸாஹஸமேயாகும்.

இங்கு, தம் திருவடிகளிலாச்ரயித்து ஹர்ஷபரவசராய் எழுந்தருளியிருந்த கோயிலண்ணனிடம் ஸ்ரீஸ்வாமியைக் காண்பித்து இவர் நமக்கு ப்ராணஸுஹ்ருத்தாவார். நமக்குண்டான

வதிசயங்களெல்லாம் இவருக்கும் உண்டாகவேணும் என்று
அருளிச்செய்தும் தாமிருந்த ஸிம்மாஸநத்திலே ஸ்ரீஸ்வாமியை
யெழுந்தருளப்பண்ணித் தம் திருக்கையிலிருந்த ஆழ்வார்களை
ஸ்ரீஸ்வாமியிடம்கொடுத்து தத்ப்ரவணரான அப்பாச்சியாரண்ணா
வைத் தழுவியுகந்து அங்கேயாச்ரயிப்பித்தும் போந்த மணவாள
மாமுனிகள் **श्रीमन्महार्यरणपुङ्गव** இத்யாதி ஸ்லோகத்தில் சொல்லப்
பட்ட தொட்டையாசார்யர் முதலான எண்மர்களை, ஸ்ரீஸ்வாமி
முதலானோர் தமக்கு அஷ்டதிக்கஜங்களாக வெழுந்தருளி
யிருப்பதுபோல் ஸ்ரீஸ்வாமிக்கு அஷ்டதிக் கஜங்களாக வங்கீ
கரித்தருளிய மாமுனிகள் ஸ்ரீஸ்வாமி தனியனுக்கும் தம் தனிய
னுக்குண்டான வதிசயத்தைக் கொடுத்தாரென்பது சாலப்
பொருந்தியதேயாகும். இவ்விஷயத்தில் மஹாசார்யரால் ரம்யஜா
மாத்ருத்தனியன் அருளிச் செய்யப்பட்டவுடன் அதி ஹ்ருத்ய
மான அப்பத்யத்தைக்கேட்டுப் பெரிய ஜீயர் அத்யந்தம் ஹ்ருஷ்
டராய் **श्रीशैलेशेति पद्यं यद्रङ्गराजो रमापतिः। त्रिखण्डं प्राह भगवान्
पूर्वं पक्षीशमण्डपे॥ तुरीयखण्डवद्धेयं तेनैव सह सर्वदा।** என்று முதலி
களை நோக்கி அருளிச்செய்தாரென்றும் **वानाद्रिरामानुजयोगिन
स्तत्पद्यं मुनिः सौम्यवरो निशम्य। मदीयपद्येन सहैव सर्वे पठन्त्विदं पद्यमिति
ह्यवोचत्॥** என்றும் பெரியோர் பணித்தது குறிக்கொள்ளத்
தக்கது. இப்படியாகில் இவ்வைதிஹ்யம் யதீந்த்ரப்ரவண ப்ரபா
வத்தில் ஏன் கூறப்படவில்லையென்று வினவுதற்கிடமில்லை. அது
ப்ரதாநமாக அழகியவ்ர முனிவரின் வைபவத்தை பேசப்
பிறந்ததாகையால் அழகியவரதமுனிவரின் வைபவத்தை முற்று
ம்பேசுவது அதன் பணியில்லையிறே. ஆகையால் ஸ்ரீஸ்வாமியின்
வைபவத்தில் மாமுனிகளுக்கு அதிசயாவஹமான சிலவற்றைக்
கூறி வேறு சிலவற்றைவிட்டு விடுவது அதற்கியல்பன்றே, ஆகை
யால் இவ்விஷயம் **श्रीगगनगिरिमुनिचरितम्, रामानुजसप्तति:,** வா
மங்கைமுனிவைபவம் போன்ற க்ரந்தங்களிற் சொல்லப்படுவது
ஸ்ரீஸ்வாமியின் வைபவத்தில் நிர்மத்ஸரர்களான பெரியோர்
களுக்கு உபாதேயதமமேயாம்.

இன்னும் யதீந்த்ர ப்ரவண ப்ரபாவத்தில் கூறப்படும்
வேறொரு ஐதிஹ்யத்தாலும் மாமுனிகளுக்குண்டான வதிசயங்
களெல்லாம் ஸ்ரீஸ்வாமிக்கும் உண்டென்று ஸ்ரீ ரங்கநாதன்
வெளியிட்டானென்பது ஸித்திக்கின்றது. அதுதான், மாமுனி

கள் தெய்வநாயகன் ஸ்ரீகார்யத்துக்காக ஸ்ரீஸ்வாமியை வான மாமலைக்கு அனுப்பியருளத் திருவுள்ளமாகிப் பெரிய பெருமாள் ஸந்நிதியில் விடைபெறுவதற்காக வெழுந்தருளி மங்களாசாஸநம் செய்துகொண்டிருக்குங்காலையில் திருவரங்கன் மாமுனிகளை அருளப்பாடிட்டருளி நம் பூபாலராயன் தட்டிலே லக்ஷ்மீ நாராயணனாக வெழுந்தருளியிருக்கும் நாம் நம் வானமாமலை ஜீயருக்கும் உமக்குமாக வரக்கடவோமென்று நியமித்து ஸ்ரீஸ்வாமிக்குத் திருவாராதந எம்பெருமானாக வெழுந்தருளினனென்ற ஐதிஹ்யமாகும். இதிலிருந்து மணவாளமாமுனிகளைப்போல ஸ்ரீஸ்வாமியையும் விட்டுப்பிரிய மாட்டாமையால் அவருக்குப்போல ஸ்ரீஸ்வாமிக்கும் தான் ஸதாஸேவ்யரா யிருக்கவேண்டுமென்றன்றோ அரங்கன் அவ்வாறு எழுந்தருளினனென்பது தெளியலாகும். ஆதலால் மாமுனிகளைப்போல ஸ்ரீஸ்வாமியை பாவித்தவம்மானுக்கு அவர் தனியனைப்போல ஸ்ரீஸ்வாமி தனியனையும் பாவிப்பது அத்யந்த மபிமதமென்பது கிம்புனர்ந்யாய ஸித்தமாகும்.

இன்னும் இந்த ரம்யஜாமாத்ருபத்யம் ஸ்ரீசைலேசபத்யத்தோடு சேர்த்தே அநுஸந்திக்கப்படுவது தமக்கு மிகவும் உகந்த விஷயமென்று வானமாமலைப் பெருமாள் ஸ்ரீஸ்வாமியின் அஷ்டதிக்கஜாசார்யர்களை நோக்கி யருளிச்செய்ததாக ராமாநுஜஸப்ததிக்ரந்தத்தில் ஸமரபுங்கவாசார்யர் அருளிச்செய்திருப்பதும் இங்கு நோக்கத்தகுந்தது. **एवं भणित्वाथ मुनीन्द्रशिष्यान् दिशागजानादिशति स्म नाथः। यूयं शठार्यादिमुनिप्रबन्धगानस्य पूर्वं तत उत्तरञ्च॥ रम्योपयन्तुः पठतोत्तरत्र पद्यस्य वानाचलयोगिपद्यम्। आदौ यथान्ते हरिशब्दपूर्वं तारं श्रुतीनां प्रवदन्ति सन्तः॥ रम्येति पद्यं पठतां नराणां श्रीशैलपद्येन तु युक्तमेव। रम्यं मम स्थानमलभ्यमन्यैः दास्यामि नित्यं कमलासहायः॥** என்பவை அதிலுள்ள ஶ்லோகங்களாகும். இங்கு, இவ்விரண்டு பத்யங்களையும் சேர்த்து அநுஸந்திப்பதற்கு ஸ்ரீவைகுண்டலாபம் பலமென்று பலத்துடன் தலைக்கட்டப்பட்டிருப்பது விசேஷமாகும். இந்த பலம் மற்ற க்ரந்தங்களில் சொல்லப்படவில்லையானாலும் **अनुक्तमन्यतो ग्राह्यम्** என்ற ந்யாயத்தாலே இதுவே ஆங்கும் சேர்த்துக்கொள்ளப்பட வமையும்.

இவ்விதம் விஶிஷ்ட புருஷவக்த்ருகமாய் விஶிஷ்ட விஷயமுமாய் எம்பெருமானாலும் ஆசார்யனாலும் நியமிக்கப்பட்ட

ஸஹயோகத்தை யுடையதுமாய் சிஷ்டபரிக்ரஹீதமுமாயிருக்கிற இப்பத்யத்வயமும் ப்ரபையும் ப்ரபாவானும் புஷ்பமும் பரிமள முப்போல அப்ருதக் ஸித்தங்களெனக் கருதி அன்று முதலின்ற றுதியாகப் பல திவ்ய தேசத்துக் கோயில்களிலும் பல மடங் களிலும் பல ஆசார்ய பரம்பரைகளிலும் பல திருமாளிகைகளி லும் ஸ்ரீஸ்வாமியின் அதிசயத்தில் நிர்மத்ஸரரான பெரியோர் களால் சேர்த்தே ஸேவிக்கப்பட்டு வருவது உலகமறிந்த விஷய மாகும்.

ஆயினும் ரம்யஜாமாத்ரு பத்யம் சேர்க்கப்படாமல் ஸ்ரீசைலேசபத்யத்தை மட்டும் ஓதி வருமிடங்கள் இவைகளை விடப் பன்மடங்கு அதிகமாகவன்றோ விருக்கின்றனவெனில், அதனால் இவைகளின் சேர்த்திக்குவரும் குறைவு என்ன? இவை களை ஸேவிக்கு மிடங்கள் இன்னும் வெகு சிலவாகவே இருந்து விட்டால்தானென்ன? இவைகளுக்குண்டான மாஹாத்ம்யம் மறைக்கப்பட்டு விடுமோ, **न हि कस्तूरिकामोदः शपथेन निवार्यते ।** ஸ்ரீசைலேசத்தனியனைத் தனித்துங்கூட வநுஸந்திக்காத விடங் களும் பல வில்லையோ, அத்தைக்கொண்டு அத்தனியனின் பெரு மைக்கு இசைந்தவர்கள் அது விஷயத்தில் விப்ரதிபத்தி பண்ணு வர்களோ. அதுபோலவே ரம்யஜாமாத்ருத்தனியனையும் மதித் திருக்குமவர்களுக்கு இவைகளின் சேர்த்தி விஷயத்தில் இதுபோன்ற காரணங்களால் அவிச்வாஸம் பிறக்க இடமுண்டோ ஆகில் அவரவர்களின் ப்ராவண்யத்துக்கு அநுகுணமாக இரண்டு தனியனையும் சேர்த்தோ தனித்தோ அநுஸந்தித்துப்போரட்டும், அவ்விதம் ப்ராவண்ய மில்லாதவர்கள் இரண்டையும் விட்டு விடட்டுமென்று வாளாவிருக்க வமைந்திருக்க இது விஷயமாகப் பேசவும் எழுதவும் புறப்படுவதேன்? என்று சிலர் வினவக் கூடும். இது ஓரளவு உண்மையே. அதாவது, இந்த அநுஸந் தான ரூபமான அநுஷ்டானத்தை ஒருவர் அப்ராமாணி கமென்று தூஷித்தோ அல்லது அப்படி அநுஸந்திக்கவொட்டா மல்வேறு சில ப்ரகாரங்களால் தடுத்தோ அதில் ப்ராவண்ய முள்ளவர் மனத்துக்கு எதுவரை க்லேசத்தை உண்டுபண்ண வில்லையோ அதுவரையில்தான் வாளாவிருப்பது உசிதம், எப்பொழுது ஆக்ரஹ ப்ரேரிதர்களாய்க்கொண்டு ஒருவரோ, பலரோ தங்கள் உக்தியாலோ அல்லது லேகத்தாலோ வேறு

உபாயங்களாலோ இவ்வநுஷ்டானத்தைக் கெடுக்க முயற்சிக்கின்றார்களோ அப்பொழுதும் அதற்கு ப்ரதிக்ரியை செய்யாமல் உபேக்ஷித்திருப்பது **गुरोर्यत्र परीवादो निन्दा वापि प्रवर्तते । शक्तस्तत्र प्रतीकारमकुर्वन् पातकी भवेत् ॥** என்கிற ந்யாயப்படி குரு பரிவத்தை ஸஹித்திருப்பதாகிய பாதகமாகத் தலைக்கட்டுகின்ற படியால் அவ்வோ ஆசார்யர்கள் விஷயத்தில் ப்ராவண்யமுள்ளவர்களுக்கு அதற்குப் பதில் செய்வது கடமையாக வாகின்றது. ஆகையினாலேயே தொன்று தொட்டு ஸ்ரீசைலேத்தனியன் ஸேவித்து அருளிச் செயல்கள் தொடங்கிச் சாற்றப்பட்டுவரும் பல ஸந்நிதிகளில் மாமுனிகள் விஷயத்தில் ப்ராவண்யமில்லாதவர்களால் நிகழ்த்தப்படும் சூழ்ச்சிகளுக்குப் பதில் செய்யக் கருதி தென்னாசார்ய ஸம்ப்ரதாய நிஷ்டர்கள் பெருமுயற்சி செய்து வருகின்றனர். இவர்கள்,இந்த ஸ்ரீசைலேசத்தனியன் ஸந்நிதிகளில் ஸேவிக்கப் பட்டாலென்ன படாவிட்டால் தானென்ன வேறெந்தத் தனியனாவது ஸேவிக்கப்பட்டு விட்டாலும்தானென்ன அங்குள்ள எம்பெருமான்களுடைய ஸாந்நித்யத்துக்கோ பக்தாநுக்ரக சீலத்வத்துக்கோ என்ன குறைவு வந்திடப்போகிறது. ஏன் இப்படி வீணாகப் பரிச்ரமப்படுகிறீர்களென்று சிலர் கேட்டக்கால் மெய்தானென்று சொல்லித் தம் முயற்சியை விட்டுவிடுவார்களா? அதுபோல ஸ்ரீசைலேசத் தனியனோடு ரம்யஜாமாத்ருத் தனியனைச் சேர்த்து ஸேவிக்கக் கூடாதென்று சிலர் சூழ்ச்சிசெய்யில் அதற்குத் தக்க ப்ரதீகாரம் செய்வது ஸ்ரீஸ்வாமி திருவடிகளில் ஸம்பந்தம் பெற்றவர்களுக்கு இன்றியமையாததொன்றன்றோ.

ப்ரக்ருதம் ஸ்ரீசைலே சாஷ்டகமென்ற சிற்றேடு அவ்வாறு செய்யப்படும் சூழ்ச்சிகளில் ஒன்றுக்குத்தக்க நிதர்சநமாகும். அதற்கு இவ்விரண்டு தனியன்களையும் சேர்த்து அநுஸந்திப்பவர்களை நிந்தித்து அவ்வநுஸந்தாநத்தைத் தடுப்பதிலேயே முக்கிய நோக்கம். அப்படி ஆக்ரஹ வசத்தால் பிறந்த அச்சுவடி அநுபபத்திகள் பல நிறைந்துகிடக்கின்றது. அதிலுள்ள அபத்தங்களையும் அது விஷயமாகக் கட்டிவிடப்பட்டிருக்கும் பொய்யான ஐதிஹ்யங்களையும் வெளியிட்டுச் சில பெரியோர்கள் அதன் அநுபாதேயத்வத்தை விளக்கி யிருக்கிறார்கள். அதை ஸஹியாத அச்சுவடியை ஆதரிக்கும் வகுப்பினர் இவர்கள்மேல்

தோஷாரோபணங்களைச் செய்து வருகிறார்கள். ஆனால் இவ் விதம் ஒருவர் வாக்கை மற்றொருவர் தூஷித்துக்கொண்டு **यथा स्त्रीणां तथा वाचां साधुत्वे दुर्जनो जनः** என்ற கணக்கிலே போய்க் கொண்டிருந்தால் இதற்கு முடிவு ஏது? என்று மத்தியஸ்தர்கள் சங்கிக்கவேண்டா. இருவர் கக்ஷியினுள்ளும் ஏதோ ஒன்றே தான் ந்யாயமான மார்க்கத்தை அநுஸரித்திருக்குமாகையால் விவேகிகள் **सन्तः परीक्ष्यान्यतरद्भजन्ते** என்றபடி அத்தையே கைக் கொள்வார்களாதலால் அதுவே முடிவான கொள்கையாகும்.

சிறிது காலத்துக்குமுன் ராமாநுஜஸித்தாந்த வைஜயந்தீ பத்ரிகையில் ஸ்ரீ ராமாநுஜஸப்ததி என்ற க்ரந்தம் வெளியா யிற்று. அது முற்றிலும் ஸ்ரீ ஒன்றான வானமாமலை ஸ்வாமி வைபவத்தையே ப்ரதிபாதிக்கின்றபடியாலும் ஸ்ரீஸ்வாமியின் அஷ்டதிக்கஜாசார்யர்களில் ஒருவராகிய ஸ்ரீஸமரபுங்கவாசார்ய ரென்கிற பேரேற்ற நாயனாரால் அருளிச்செய்யப்பட்ட ஸரளகாவ்யமாக இருப்பதாலும் ஸ்ரீஸ்வாமி திருவடிகளில் ப்ராவண்யமுள்ள ஸஹ்ருதயர்களுக்கு மிகவும் உகந்த விஷயமாக விருக்குமெனக் கருதியே வெளியிடப்பட்டது. அநந்தரம் அந்த க்ரந்தத்தின் அழகை அநுபவித்துத் தாமும் அதுவிஷயத்தில் கிஞ்சித் கரிக்கவேணுமென்ற உத்தமமான அபிஸந்தியுடன் தி. செள. ஸ்ரீநிவாஸாசார்ய சிரோமணி ஸ்வாமி அதற்கு ஸம்ஸ்க்ருத பாஷையில் ஒரு உபோத்காதம் எழுதியுள்ளார். அதில் ஸப்ததியின் விஷயங்களை ஸங்க்ரஹித்துக்கொண்டு வரும் க்ரமத்தில் அதில் சொல்லப்பட்ட இரண்டு தனியன்களின் ஸஹாநுஸந்தான நியமத்தை ஆக்ரஹத்துடன் மறுக்கின்ற அஷ்டகத்தின் அபத்தங்களைச் சொல்லும்படி நேர்ந்ததேயல் லாமல் வேறன்று.

அந்த உபோத்காதம் வெளிவந்த பிறகு ஆர். ரங்கராஜய்யங் காரென்பாரொருவர் தாம் ஆதரிக்கும் அஷ்டகம் வெகுவாக தூஷிக்கப்படுவதைக் கண்டு கலங்கி நேர்வழியில் அத்தை ஸாது வென்று ஸாதிக்க வியலாமல் ரம்யஜாமாத்ருபத்யத்துக்கு ஒரு அப்ரதிம வைபவம் வாய்த்திருப்பதே! என்று தனக்குள் விசாரப்பட்டு அந்தக் கவலையை 'ரம்யஜாமாத்ருபத்ய விசாரம்' என்ற பெயரினால் வெளியிட்டிருக்கிறார். இது உண்மையில் இவராலோ அல்லது இவர் பெயரையிட்டு வேறொரு மாயக்

கூத்தராலோ யாரால் செய்யப்பட்டிருந்தாலும் சரி. ஒரு பொய்யைப் பொதிந்துகொண்டிருக்கிற ஸ்ரீசைலேசாஷ்டகத்தை உயிர்ப்பிக்கவெண்ணி உடல்முழுதும் பொய்யாக அவதரித்த ஒரு எழுத்துருவமே இஃதென்பது, இங்கு விளக்கப்படுவதை மத்யஸ்தர்கள் கண்டுகளிப்பார்களாக.

அதில் முதல் பாராவில் அவர் சொல்லியிருக்கும் முதல் பொய்யாவது ஸ்ரீசைலேசாஷ்டகம் எறும்பியப்பாவால் செய்யப்பட்டதா இல்லையாவென்று ஆராய்வது பயனற்றதாகுமென்பதும் அது இல்லை செய்யப்பட்டுவிட்டாலும் அதில் சொல்லப்பட்டிருக்கும் உண்மை இல்லை செய்யப்படாது என்பதுமாகும். அவ்வஷ்டகம் ப்ராமாணிகாக்ரேஸரரான அப்பாவால் செய்யப்பட்டிருக்குமாயின் அதில் பொய் சொல்லப்பட்டிராதென்றும் வேறொரு ஆக்ரஹியால் செய்யப்பட்டிருப்பின் பொய்கள்பொதிந்திருப்பது ஸஹஜமென்றும் வித்திப்பது பயனாகவிருக்கும்போது அவ்வாறுராய்ச்சி ஏன் பயனற்றதாகும்? அதில் சொல்லப்பட்டது உண்மையேயில்லாமலிருக்கும்போது வஸ்துஸ்திதி அதில் கூறப்படுவதாகச் சொல்லுவது எங்ஙனம் பொருந்தும்?

இரண்டாவது பாராவில் இந்த அஷ்டகத்தை அப்ரமாணமென்று நிரூபிப்பது ஸ்ரீசைல ரம்யஜாமாத்ருபத்யங்களைச் சேர்த்து அநுஸந்தித்து வருமவர்களுக்கு ப்ராப்தமேயானதென்றும் 3-வது பாராவில் இவ்வஷ்டகம் ஒரு அர்வாசீநரால் தான் கல்பிக்கப்பட்டதென்பதைத் தாமும் இசைவதாகவும் குறிப்பிட்டிருக்கின்றார். அங்ஙனேயாகில் அதை தூஷிப்பவர்களிடம் இவருக்கு ஆத்திரம் பொங்குவதேன்? அதற்கு சிஷ்டபரிக்ரஹமிருப்பதாகவும் அது புராதனமென்றும் ஸ்தாபிக்கத்தான் ஏன் முயலவேண்டும். அப்பொழுது இவருக்கு 'ரம்யஜாமாத்ரு பத்ய விசாரம்' என்ற இந்தலேகம் எழுதுவதே அப்ராப்தமன்றோ. ரம்யஜாமாத்ரு பத்ய விஷயமான உண்மையை வெளியிடுவதற்காக வந்தேன் என்பாரேல் அந்தோ! அது இவருடைய பணியல்லவே. அதன் உண்மையை இவரிடமிருந்து தெரிந்துகொள்ள யார் விரும்பினர்கள், அவ்விதம் உண்மையை வெளியிடவுமில்லையே. முற்றிலும் உண்மைக்கு மாருகவன்றே இருக்கின்றது. 3-வது பாராவில் அஷ்டகத்தை மாமுனிகள் காலத்

துக்குப் பின்னுலேயே தோன்றியதென்று தாம் இசையுமிடத்திலும் கூடத் தமது கைச்சரக்காகிய ஒரு பொய்யைப் புகுத்தியிருக்கிறுர் காண்க. ஸ்ரீசைலேச ரம்யஜாமாத்ருபத்யங்களின் ஸஹாநுஸந்தானம் எறும்பியப்பா காலத்துக்குப் பிற்பட்டதென்றும் அதை நிஷேதிக்கும் அஷ்டகம் அதற்கும் பிறகேயாக வேண்டுமென்றும் சொல்லுகிறுர். இந்த ஸஹாநுஸந்தானம் எறும்பியப்பாகாலத்துக்குப் பிற்பட்டதென்று ஸரியான காரணங்களைக்கொண்டு காட்டாமலே कुन्ती पुत्रोविनायकः என்னுமாப்போலே இது பிற்பட்டதென்று மட்டும் இவர் சொல்லிவிட்டால் அதை எல்லோரும் நம்பிவிடவேண்டும் போலும்.

4-வது பாராவில் சொல்லியிருப்பவைகள் இதையும் விடப் பழுத்த பொய்யாகும். இவ்வஷ்டகம் ஸமீபகாலம்வரை வானமாமலை மடத்தில் அநுஸந்தானத்திலிருந்ததென்றும் தங்களநுஷ்டானத்தைக் கண்டிப்பதாக விருந்தபோதிலும் மடத்தாருக்கு இதனிடம் த்வேஷம் பிறக்கவில்லையென்றும் மடத்துப் புஸ்தகசாலையிலுள்ள ஒலை ஸ்ரீகோசங்களில் ஸ்தோத்ர பாடங்களோடு நாளைக்கும் இது திகழ்கின்றதென்றும் அறிவிலிகளும்கூட உபஹஸிக்கும்படியான அடாப்பொய் மூட்டைகளை அஞ்சாது அவிழ்க்கின்றுர். மடத்திலுள்ள அநுஸந்தானம் முதலான வநுஷ்டாநங்களையும் ஆங்கு புஸ்தகசாலையிலுள்ள ஸ்ரீகோசங்களின் ஸ்வரூபங்களையும் மடத்திலுள்ள ஸ்ரீவைஷ்ணவர்களைவிட இவர் எவ்வாறு நன்கு உணர்ந்தனரோ. தங்களுடைய அநுஷ்டானத்தை நிஷேதித்தபோதிலும் இவ்வஷ்டகத்தை மடத்தார் ஆதரித்தே போ[illegible] தார்களென்று பிதற்றும் இவருடைய பித்தநோய் மருத்துவனு[illegible] நின்ற மாமணி வண்ணனுக்கும் கூட மாற்றுதற்கரிதன்றே. நிற்[illegible] ரம்ய ஜாமாத்ருத்தனியன் கோவில்களில் புகுந்ததுதான் ப்ராமா[illegible] ணிகமுமன்று யுக்திஸஹமுமன்று என்பது இவருடைய வ்யா[illegible] ஸத்தின் ஸாரமென்கிறுர். முன் காட்டப்பட்ட ப்ரமாணங்[illegible] ளாலும் உபபத்திகளாலும் இத்தனியனுக்கு ஸ்ரீசைலேசபத்ய[illegible] ஸேவிக்கப்படுமிடங்களிலெல்லாம் ஸஹயோகம் ஸித்தித்திரு[illegible] கக் கோயில்களில் மட்டும் இதற்கு ப்ரவேசம் கிடையாதென்[illegible] மறுக்கவந்த இவர் வாதமேதான் ப்ராமாணிகமில்லாமலும் யுக்[illegible] ஸஹமில்லாமலும் ஒழிய ப்ராப்தம். இப்படியிருக்க இவர் இ[illegible] வாறு சொல்வதனுல் ரம்யஜாமாத்ருத்தனியன் கோவில்களிலு[illegible]

அநுஸந்திக்கப் படுவதாலுண்டான இவரது நெடுநாளான உள் வெதுப்பை வெளியிட்டாராகின்றதே தவிர வேறில்லை.

5-வது பாராவில் ஸ்ரீ வானமாமலை ஸ்வாமி மணவாளமா மாமுனிகளோடு ஐக்யப்பட்டிருப்பதுபோல அவருடைய தனிய னும் மாமுனிகள் தனியனோடு ஐக்யப்பட்டிருப்பதாகக் கருதி அது ஸேவிப்பதனாலேயே ஸ்ரீஸ்வாமி தனியனும் ஸேவிக்கப் பட்டதாக நினைத்து மடத்தார் அகமகிழ்ந்திருக்கலாமே என்று பறைகின்றார். இங்கு இவர் குறிப்பிடும் ஐக்யம் எத்தன்மையது என்று பார்க்குங்கால் த்ருஷ்டாந்தத்திலும் தார்ஷ்டாந்திகத்தி லும் இரண்டு வ்யக்திகள் ப்ரத்யக்ஷ ஸித்தாமாயிருக்கும்போது ஏகவ்யக்தியாயிருப்பதாகிய ஐக்யம் சொல்லவொண்ணாது. ஆகை யால் ஸம்பந்தாதிசயரூபமாகவே கொள்ளவேணும். அப்படி யாகில் ரம்யஜாமாத்ருத்தனியனுக்கு ஸ்ரீசைலேசபத்யத்தோடு ஏகவாக்யதாரூபமாகிய ஸம்பந்த விசேஷமே ஐக்யமென்று தேறு கின்றபடியால் இதை அநுஸந்திக்காமல் ஸ்ரீசைலேசபத்யத்தை மட்டும் ஸேவிப்பதால் இவ்வைக்யம் எப்படி அங்கீகரிக்கப்பட்ட தாகும். இதை அங்கீகரித்துக்கொண்டு ரம்யஜாமாத்ருத் தனியனை விட்டுவிடச் சொல்லுமிவர் ப்ராந்தர்களுக்கு அக்ர கண்யரேயாகக்கடவர். மேலும் இவரது ப்ராந்திஸித்தமான ஐக்யத்தைக்கொண்டு விஷய நிரூபணம் பண்ணப் புகுந்தால் ஆசார்யர்களெல்லோருக்கும் ஸ்ரீபாஷ்யகாரரே அவயவியென்று ஸம்ப்ரதாயஸித்தமாயிருப்பதால் அவருடைய தனியனாகிய யோ நித்யமச்யுதபத்யத்தை ஸேவிப்பதாலேயே அவயவபூதர்களான மற்ற ஆசார்யர்களுடைய தனியன்களும் அநுஸந்திக்கப்பட்டு விட்டதாக நினைத்து ஸ்ரீசைலேசபத்யம் முதலானதும் கூட வன்றோ கைவிடப்பட ப்ராப்தமாகின்றது. அப்படியாகில் ஸ்ரீ சைலேசபத்யத்தை அநாதரிப்பவர்களும்கூட அத்தை ஆதரிப்ப வர்களோடு ஒன்றுபட்டு வாழ இடமேற்படுகின்றமையால் அவ் விதமான கைங்கர்யத்தை லோகோபகாரமெனக்கருதி இவர் போன்ற தார்மிகர்கள் அதில் ஈடுபடக் கூடாதா ?

8-வது பாராவில் ஸ்ரீசைலேசத்தனியன் அவதரித்த பிற்பாடு அதை முன்னிட்டே எங்கும் அருளிச்செயல் ஸேவை நடத்தப்படவேண்டுமென்று நியமிக்கப்பட்டது ஜகத் ப்ரஸித்த மென்கிறார். இங்கு ரம்யஜாமாத்ருத்தனியனுக்கு அம்மாதிரியான

ப்ரஸித்தியில்லை யென்று இவர் நினைக்கின்றார்போலும். ஏன் இல்லையோ! இங்கு ஜகத் பதத்தினால் அஜ்ஞர்கள் விசேஷஜ்ஞர்கள் வாசியற எல்லோரையும் இவரால் விவக்ஷிக்க வியலாது. ஆகையால் மாமுனிகளின் ஒப்புயர்வற்றவதிஶயத்துக்கு இசைந்தவர்களையே அப்பதத்தால் விவக்ஷிக்கவேண்டியிருப்பதால் அவ்விதம் ஸ்ரீஸ்வாமியின் பெருமைக்கு இசைந்தவர்களாகிய ஜகத்தில் இத்தனியன் விஷயமான நியமநத்தின் ப்ரஸித்திக்கும் குறைவில்லையன்றோ சில மத்ஸரிகள் இப்ரஸித்தியை அபலபிக்கப் புகுவராகில் அவர்கள் ஸ்ரீசைலேசத்தனியனின் ப்ரஸித்தியை அபலபிக்கின்றவர்களோபாதி பொருட்படுத்தக்கடவரல்லர்.

10-வது பாராவில் நம்பிள்ளை முதலானோர் அத்யந்தம் உபகாரகராயிருப்பதால் அவர்களின் தனியன்களையும் ஏன் சேர்த்து அநுஸந்திக்கக்கூடாதென்றும் 11-வது பாராவில்எல்லா ஆழ்வார்களுக்கும் **भूतं सरश्च** என்ற தொகுதித் தனியனிருப்பதுபோல எல்லா ஆசார்யர்களுக்கும் புதிதாக ஒரு தொகுதித் தனியனை நிருமித்து ஏன் ஸேவிக்கக்கூடாதென்றும் கேட்டுக்கொண்டு அங்ஙனம் ஸேவிக்க பகவதாசார்ய நியமனமில்லை யென்று விடையிறுக்கின்றார். இவ்வினவிடையால் இவர் இந்த ந்யாத்தை ஸ்ரீஸ்வாமி தனியன் விஷயத்தில் ஏறிட முயல்கின்றாரென்பது வெளிப்படை. ஸ்ரீஸ்வாமியின் உபகாரத்தின் கனத்தால் அவர் தனியன் சேர்க்கப்பட்டிருக்கிறதென்று வாதிப்பவர் ஒருவருமில்லாதிருப்பதையும் மாமுனிகள் காலம் முதலே இருந்துவரும் இத்தனியன் புதிதாகக் கல்பிக்கப்பட்டதன்றென்றும் இதை அநுஸந்திப்பவர்கள் எம்பெருமான் ஆசார்யன் ஆகிய இருவர் நியமனந்தாலுமே அநுஸந்தித்து வருகிறார்களென்றும் தெரிந்திருந்தும் இவர் இந்த ந்யாயத்தை அதிதேசம் பண்ண முயன்றது தௌர்ஜந்யத்தாலே ப்ராக்ருத ஜநவஞ்சனத்துக்காகவே தவிர வேறில்லையென்பது விவேகிகள் உணரத்தக்கது.

12-வது பாராவிலும் முன்னிரண்டு பாராக்களிற் பாடின பாட்டையே திரும்பவும் பாடிவிட்டு க்ருஹங்களில் எதை எப்படி அநுஸந்தித்தாலும் பொதுஸ்தலங்களில் அநுஸந்திக்கும் ஸம்ப்ரதாயம் வரம்புகடந்து செல்லாதென்கிறார். இவர்போல்வார் க்ருஹங்களில் வரம்புகடந்து வாயில்வந்தவற்றை அநுஸந்திக்கு

மவர்போதும். க்ருஹங்களிலாகட்டும் பொதுஸ்தலங்களென்று இவர் கருதும் ஆலயங்களிலாகட்டும் எங்கும் அருளிச்செயல்கள் ஸம்பந்தப்பட்டமட்டிலும் அநுஸந்தாந க்ரமத்துக்கு ஏகரூப மான வரம்புகள் இருந்தேவருகின்றன. பூருவர்களின் வசநாநு ஷ்டான ரூபமான அவ்வரம்புகளைக் கடந்து தன்னெஞ்சிற் தோற்றினபடி ஸந்நிதிகளிலொருவிதமும் க்ருஹங்களிலொரு விதமும் ஆஸ்திகனாயிருப்பானொருவன் அநுஷடிக்கத் துணி வானோ.

13-வது பாராவில் மாமுனிகளுக்குப் பிற்பட்டவர்களின் தனியன் ஸர்வஸாதாரணமாக அநுஸந்தேயமாகவேணுமென்று ஆசைப்படுவது தகுமோவென்கிறார். ஆனால் ஸ்ரீஸ்வாமி தனி யன் விஷயத்தில் மட்டும் இந்தக்கேள்விக்கு இடமில்லையென் பதை இவர் உணர்கின்றிலர். ஏனெனில் இத்தனியன் சேர்ந்தே மாமுனிகளின் தனியன் பூர்ணமாகிறதென்று ஸித்தித்திருப்ப தால் அவர் திருவுள்ளத்துக்கிசைந்தபடி ஏகவாக்யமான இவ் விரண்டு தனியன்களையும் சேர்த்தே யநுஸந்தித்து மாமுனிகள் திறத்தில் தமது பரிபூரணமான நிஷ்டையை யாவரும் வெளிப் படுத்த வேணுமென்றும் அபூர்ணமான ஸ்ரீசைலேசத் தனியனை மட்டும் அநுஸந்தித்துக் குறைவாளராக ஒருவரும் ஆகவேண்டா மென்றும் ஆசைகொள்ளில் அது தகாததாகுமோ அப்ரஸக்த மாகுமோ, அப்பேற்றில் ஆசைகொள்ளாதவர்களின் இழவுக்கு வருந்துகின்றோ மத்தனையேயாம்.

16-வது பாராவில் ரம்யஜாமாத்ரு பத்யத்தை விட்டுவிட்டு ஸ்ரீசைலேச பத்யத்தை மட்டும் ஸேவித்துவரும் ஆசார்ய பரம் பரைகள் பலவிருப்பதால் இவைகளுக்கு ஸம்பந்த நியமமில்லை யென்கிறார். இது என்ன அசட்டுவாதம். ஸ்ரீசைலேசத் தனி யனையும் விட்டுவிட்டு திவ்யப்ரபந்தம் முதலானவற்றை ஸேவித்து வரும் பரம்பரைகளுமில்லையோ! அதனால் ஸ்ரீசைல பத்யத் துக்கு ப்ரபந்தங்களுடன் ஏற்பட்டிருக்கும் ஸம்பந்த நியமத் துக்கு பங்கம வந்துவிட்டதாக இவர் இசைகின்றாரா? அப்பரம் பரைகள் பகவதாஜ்ஞாஸித்தமான ஸம்பந்த நியமத்தைப் பரிபா லநம் பண்ணவில்லையத்தனையே தவிர அதனால் அந்நியமத்துக்கு ஒருக்காலும் பங்கம் வாராதென்று வாதிப்பரேல் அந்த வாதம்

ரம்யஜாமாத்ருத் தனியன் விஷயத்திலும் ஒக்குமென்பதை இவர் உணரவில்லையே.

17-வது பாராவில் ஸ்ரீஸ்வாமி மாமுனிகளுக்குப் பாதரேகா ரூபியாய் அவரை விட்டுப் பிரிக்கப்படாம லிருப்பதுபோல அவர் தனியனும் மாமுனிகள் தனியனை விட்டுப் பிரிக்கப்பட வியலா தென்று சொல்லவொண்ணுது. அப்படியாகில் உடையவருக்குப் பாதுகையாகவும் பாதச்சாயையாகவும் எழுந்தருளியிருந்த முதலியாண்டான் எம்பார்களின் தனியன்களும் உடையவர் தனியனோடு சேர்க்கப்பட்டிருக்கவேணுமே யென்கிறுர். ரம்ய ஜாமாத்ருத் தனியன் ஸ்ரீசைலத் தனியனோடு சேர்க்கப்பட்ட மைக்கு பகவதாசார்ய நியமனங்களே முக்ய ப்ரமாணங்களென் றும் பாதரேகாமயத்வம் ஏகவாக்யத்வம் முதலியவைகள் அப்யுச்சய யுக்திகளென்றும் வஸ்துஸ்திதி யிருக்கும்போது அவ்வித ப்ரமாணமில்லாத முதலியாண்டான் எம்பார்களின் தனியன்களை த்ருஷ்டாந்தமாக வெடுத்துக்கொண்டு எமது கொள்கையை மறுக்கப்புகு மிவருக்கிதனில் மிக்கோரயர்வுண்டே. மேலும் த்ருஷ்டாந்தங்களையாவது ஸத்ருசமாகக் கொடுக்கக் கூடாதா. பாதத்தைவிட்டு ஒருக்காலும் பிரிக்கப்படாமலிருக் கும் தன்மை பாதரேகைக்குப்போல பாதுகை பாதச்சாயை களுக்கு உள்ளதொன்றே. வெளிச்சத்தின் ஸம்பந்தமில்லாம லிருக்கும்போது பாதச்சாயை பாதத்துடனில்லாமலிருப்பதை யும் கழற்றப்பட்டிருக்கும்போது பாதுகையில்லாமலிருப்ப தையும் காண்கின்றேமே. ஆக அவ்வாசார்யர்களுக்கே உடை யவருடன் அப்ருதக் ஸித்தமான ஸம்பந்தமில்லாமலிருக்கும் போது அவர்கள் தனியன்களுக்கு உடையவர் தனியனோடு நித்ய யோகத்துக்கு ப்ரஸக்தியேது?

18-வது பாராவில் எறும்பியப்பா அண்ணன் முதலான சிஷ்யர்களைவிட வானமாமலை ஸ்வாமிக்கு என்ன அதிஶய என்று வினவுகின்றுர். ரம்ய ஜாமாத்ருபத்ய விசாரம் என்று ஒரு வ்யாஜத்தைக் கைக்கொண்டு தாம் ப்ரயோகிக்க த்வரித்துக் கொண்டிருந்த ப்ரம்மாஸ்த்ரத்தை இங்கு இவர் ப்ரயோகித்து விட்டார். இங்கு இதன் செல்லாமையை யறியாத விவரது பேதமையிருக்கும்படி யென்னே! ஸ்ரீஸ்வாமி பெரிய பெரும ளால் மாமுனிகளுக்கு ஒப்பாகக் கருதப்பட்டதும் மாமுனிகள

னும் தமக்கு ஸமராக பாவிக்கப்பட்டதும் முதலான பல அதிச
யங்களோடு இவர் குறிப்பிடும் ஆசார்யர்களிற் பலரும் ஸ்ரீஸ்வா
மியை முன்னிட்டே மாமுனிகளை யாச்ரயிக்கும்படியான முக்கிய
மான வதிஶயமும், ஸ்ரீமதண்ணன் அடியேனை அங்கே (ஸ்ரீஸ்வாமி
திருவடிகளில்) ஆச்ரயிப்பிக்கா தொழிந்ததேயென்று மாமுனிக
ளிடம் அநுதாபத்துடன் விண்ணப்பித்ததும், பெரியஜீயர்
தம்முடைய வந்திம தசையில் தம்மை யாச்ரயிக்க வேணு
மென்று வந்த அண்ணராய சக்ரவர்த்தியை நோக்கி ‘உமக்குத்
தகுதியான பேரில்லையே. முந்துறச் சேரப்பெற்றிலீரே.'' என்று
என்று அப்போது ஸ்ரீஸ்வாமி தம் பரிஸரத்தில் இல்லாமையை
நினைத்து அருளிச்செய்ததும் போன்ற பல வதிஶயங்களும்
யதீந்த்ரப்ரவணப்ரபாவம் முதலிய க்ரந்தங்களில் கோஷிக்கப்
படும்போது அக்கோஷத்தைக் கடலோசையோபாதி நினைத்து
மற்றையோர்களைவிட ஸ்ரீஸ்வாமிக்கு என்ன அதிஶயம் என்று
இவர் வினவுவதை எத்துடன் ஒப்பிடுவதென்பதெமக்கு விளங்க
வில்லை. மேலும் இந்த ப்ராந்திக்கு துணையாக **तुल्यः को वा वरद
गुरुणा तेषु नारायणेन** என்ற வரவரமுனி சதகத்திலுள்ள ஶ்லோ
கத்தை உத்தரிக்கின்றார். இந்த பத்யத்தால் கோயிலண்ணனுக்கு
ஸ்ரீஸ்வாமியைவிட ஏற்றம் சொல்லப்படுவதாக நினைத்துத்
தடுமாறுகின்றார். அந்தோ அந்த சுலோகத்தின் கருத்தை
அறிந்திலரே. **प्रेमस्थानं वरवरमुने सन्तु सन्तः शतं ते तुल्यः को वा
वरदगुरुणा तेषु नारायणेन । सानुक्रोशः स तु मयि दृढं सर्वदोषास्पदेऽस्मिन्
मामेवं ते मनसि कुरुते मत्समः को हि लोके॥** என்ற இந்த ஶ்லோ
கத்தை முழுதும் நோக்குங்கால் தேவராஜகுரு ஸகல தோஷங்
களுக்கும் இருப்பிடமான தன்னை மணவாளமாமுனிகளின்
திருவுள்ளத்தில் ''இவனோரடியானு முளனெ''ன்று படுத்திய
பேருபகாரத்தைப் பற்றி அண்ணனை இப்படியும் மாமுனி
களுக்கு ஒரு ப்ரேமபாத்ரபூதராக உளராவதே என்று கொண்
டாடுவது தெளியக்கிடப்பதால் அவர் தன் தோஷத்தைக் கனப்
படுத்திக் கூறியதுபோல அண்ணனிடம் மாமுனிகளுக்கு உள்ள
ப்ரீதியையும் மிகைப்படுத்தி ஒரு அதிசயோக்தியாகக் கூறினா
ரென்றே கொள்ளக்கடவது. இன்னும் அண்ணனோடு தேவராஜ
ருக்கு விசேஷ ஸம்பந்த முண்டாகையால் ப்ராவண்யாதிசயத்
தாலே மற்றும் பல ஶ்லோகங்களிலும் இவ்வாறு புகழ்கின்றார்.

முதலிலேயே **वरवरमुनिवर्यपादुरत्नं वरदगुरुं गुरुमाश्रये गुरूणाम्।** என்கிறார். அதைக்கொண்டு மாமுனிகளருளிட்ட உலகிலுள்ள ஸகல ஆசார்யர்களுக்கும் அண்ணனே குருவென்று ஸித்தாந்தம் செய்யப்போமோ? ஆகையால் இவையெல்லாம் அவர் ப்ரஶஸ்த்தர் என்பதை யுணர்த்தும் அர்த்தவாதமேயாம். அவருடைய ப்ராஶஸ்த்யத்தில் விப்ரதிபத்தி பண்ணுவார் ஒருவருமிலர். இன்னும் **पार्श्वतः पाणिपद्माभ्यां परिगृह्य भवत्प्रियौ** என்ற விடத்தில் ஸ்ரீஸ்வாமியை விட்டு வேறு இருவரையே யன்றோ மாமுனிகளுக்கு ப்ரியராகச்சொன்னது என்கிறார். இங்கு வேறு இருவரை ப்ரியராகச் சொல்லிவிட்டதிலிருந்து ஸ்ரீஸ்வாமி அங்ஙனம் ப்ரியரில்லையென்று எப்படி ஸித்தித்துவிடும்? **भृत्यान् प्रेमार्द्रया दृष्ट्या सिञ्चन्तम्** என்று ஸகல சிஷ்யர்களையும் ப்ரேமத்தோடே நோக்கும் உத்தம ஸ்வபாவராகிய வரவர முனிகளுக்கு ப்ரேம பாத்ரமாயில்லாமல் ஒருவரும் இருக்கக்கடவரில்லையே. ஆனாலும் அத்யந்தம் ப்ரியராகிய ஸ்ரீஸ்வாமியும் தம்முடன் எழுந்தருளாநிற்க மாமுனிகள் அவர் திருக்கைகளை விட்டுவிட்டு வேறு இருவரின் ஹஸ்தங்களை க்ருஹித்துக்கொண்டு எழுந்தருளுவதற்கு என்னகாரணமென்பீரேல் கேண்மின். ஸ்ரீஸ்வாமி உத்தமாச்ரமியாகையாலே ஆசார்ய பகவத் ஸந்நிதிகளிலே த்ரிதண்டஹஸ்தராகவே யிருக்கவேணுமென்கிற சாஸ்த்ரத்தை அநுஸரித்து அவ்விதம் எழுந்தருளினமையால் அவரது திருக்கைகளை மாமுனிகளுக்கு க்ருஹித்துக்கொள்ள வியலாதிருப்பதே காரணமென்றுணர்க.

19-வது பாராவிலும் இத்தனியன்களின் ஸஹாநுஸந்தான விஷயத்தில் விதிரூபமான ஸம்ப்ரதிபந்ந ப்ரமாணமொன்று மில்லையென்றும் அப்படி யிருக்குமானால் அந்த வநுஸந்தானத்தை வரவரமுனி ஸம்ப்ரதாயஸ்தர்கள் எல்லோரும் கைக்கொண்டிருப்பார்களேயென்றும் கூறுகிறார். இது விஷயத்தில் ப்ரமாணங்கள் முன்னமே காட்டப்பட்டன. ஆனால் யதீந்த்ரப்ரவணப்ரபாவத்தில் சொல்லப்பட்டிருந்தால் தான் அவை ஸம்ப்ரதிபந்நங்களாகும் என்பாரேல் அதில் சொல்லப்படாதவநுஸந்தானக்ரமங்களையும் தென்னாசார்ய ஸம்ப்ரதாயஸ்தர்களெல்லோரும் ஆதரித்து வருகின்றமை முன்பு காட்டப்பட்டிருக்கின்றது. அதில் கூறப்படாதபோதிலும் அன்னோர்கள் தொன்றுதொட்டு

ஒரு மிடராக அவ்வோ க்ரமங்களை ஆதரித்துப் போருவதே சிஷ்டாசாரரூபமான ப்ரமாணகோடியில் ஆகக்கடவதெனக் கொள்ளுங்கால் அவற்றிலோயாதி ஸ்ரீசைல ரம்யஜாமாத்ருபத்யங்களின் ஸஹாநுஸந்தான நியம விஷயத்திலும் மாமுனிகள் விஷயத்தில் பரிபூர்ண நிஷ்டையையுடைய தென்னாசார்ய ஸம்ப்ரதாயாநுஸாரிகளான சிஷ்டர்களின் அனுஷ்டானரூபமான ப்ரமாணத்துக்குக் குறையில்லையிறே. ஆக வசநாநுஷ்டான ரூபமான உபயவிதப்ரமாண ஸித்தத்வம் இச்சேர்த்தியநுஸந்தானத்துக்கு வந்த ஏற்றமாகும், இவ்விதம் இங்கு சொல்லப்படும் வசநாநுஷ்டானங்கள் ஸ்ரீ ஸ்வாமி விஷயமான க்ரந்தங்களிலும் அவர் விஷயத்தில் ப்ராவண்யமுள்ள சிஷ்டர்கள் மாட்டிலுமே காணக்கிடந்தாலும் இப்படிப்பட்ட ப்ரமாணங்களில் ஒன்றையாவது மற்ற அஷ்டதிக்கஜாசார்யர்கள் தனியன்கள் விஷயத்தில் காண்கின்றிலோம். அவர்கள் தனியன்களுக்கும் இதற்குப்போன்ற பெருமை இருக்குமாகில் அவர்களுடைய வைபவப்ரகாசகமான க்ரந்தங்களில் அதற்குரிய ப்ரமாணங்களை எழுதி வைத்திருப்பார்களே! அதுபோல அவர்கள் திறத்தில் ப்ரவணராயிருப்பார்கள் அவர்கள் தனியன்களைச் சேர்த்து அநுஸந்தித்து வந்திருப்பார்களே! அவ்வாறு ஒன்றும் செய்யவில்லையே! என்னே! முன்னோர்களின் ஆர்ஜவமிருக்கும்படி. அப்படிப்பட்ட ப்ரமாணங்களொன்றுமில்லாமையால் தங்கள் கூடஸ்தர்களுடைய தனியன்களை அருளிச்செயல்கள் முதலானது ஸேவிக்குமிடத்தில் அநுஸந்திக்க முடியவில்லையே! வானமாமலை ஸ்வாமி தனியனுக்கு ரூடமூலமான அநுஸந்தானம் ஏற்பட்டுவிட்டதே! என்ற ஆற்றாமையினாலன்றோ ஸ்ரீஸ்வாமியின் பெருமையை ஸஹியாத அர்வாசீநாஸூயாக்ரந்திகள் அவர் தனியனை ஸேவிக்கக்கூடாதென்று ப்ரமாணாபாஸங்களை க்ரந்தரூபமாக எழுதி வைத்துக்கொண்டும் வாய்க்கு வந்தபடி பிதற்றிக்கொண்டும் சிறிது காலமாக விபரீதப்ரசாரம் பண்ணிப் போருவது.

20-வது பாராவில் ஸ்ரீசைலேசத்தனியனையும் கேள்விப்படாதவர்கள் பலரில்லையோவென்று கேட்டுக்கொண்டு அத்தனியனை ஆதரிக்கும் வகுப்பாரைப்பற்றியே இங்கு பேச்சென்றும் அவ்வகுப்பாரிலும் ரம்யஜாமாத்ருத் தனியனை ஆதரிப்பவர்களை விட உபேக்ஷிக்குமவர்கள் பதின்மடங்காக விருக்கின்றார்களென்

றும் இந்த ஸ்திதியில் மடத்தார் தங்கள் தனியனை உலகமெல்லாம் கொண்டாட வேணுமென்று நினைப்பது தவறென்றும் தமது பழைய பாட்டையே படிக்கின்றார். இதற்கு ஸமாதானம் முன்பே ஒருவாறு கூறப்பட்டிருக்கிறது. மேலும் இஃது ஒரு தூஷணம்போலத் தோன்றினாலும் நமது கொள்கையை ஆதரிப்பதிலேயே பர்யவஸிக்கின்றமையால் घट्टकुड्यां प्रभातम् என்ற முதுமொழியை நினைப்பூட்டுகின்றது. இங்கு ஸ்ரீசைலேச தனியனை ஆதரிப்பவர்களைவிட அநாதரிப்பவர்கள் மிகப் பலராகவிருந்தபோதிலும் அதன் அதிசயத்துக்கு எவ்வாறு குறைவில்லையோ அதுபோல இத்தனியனையும் ஆதரிக்காதவர்கள் எவ்வளவு அதிகமாகத்தானிருந்தாலென்ன? அதனால் இதன் பெருமைக்கு ஒருக்காலும் குறைவு வாராது. இத்தசையில் ஸ்ரீசைலபத்யத்தை உலகமெலாம் போற்றவேணுமென்று ஒருவர் நினைப்பது தவறாகில் இத்தனியனை அவ்வாறு மடத்தார் நினைப்பதும் தவறாகட்டும். அந்நினைவு யுக்தமாகில் இதுவும் அத்யந்தம் யுக்தமாகக் கடவதே.

21-வது பாராவில் திருவெவ்வுளூர் முதலான ஸ்தலங்களில் ஸ்ரீமத் அஹோபிலம்ஸ்வாமி யதேச்சாதிகாரம் நடத்தி வருவது போல மடத்தார்களும் தங்களுக்கு அதீனமான விடங்களில் இத்தனியனை ஸேவிக்கும்படி செய்திருக்கிறார்கள். அங்கு வர்த்தமான ஸ்வாமி தனியன் வரை எல்லாத் தனியன்களையும் ஸேவித்த பிறகேதான் लक्ष्मीनाथसमारम्भां என்ற பத்யத்தை ஸேவிக்கவேண்டுமென்று ஒரு நியமம் செய்தாலும் அத்தை யாரே தடுக்கவல்லரென்கிறார். விஷயங்களை நன்கு ஆராய்ந்து ஸயுக்திகமாக நிருபணம் செய்யாமல் இவர் போல்வார் கைவந்தபடி அரைகுறையாக வெழுதி ஸாமான்ய ஜனங்களை ப்ரமிக்கச்செய்ய முயல்வது கலியின் கொடுமையே. ப்ரக்ருதத்தில் அஹோபிலம் ஸ்வாமி தமக்கு சொந்தமான திவ்ய தேசங்களில் என்னென்ன அநுஷ்டானங்களை ஏற்படுத்தியிருக்கிறாரென்றும் அது எப்படி அப்ராமாணிகமென்றும் நிரூபித்துக் காட்டி அதுபோல ரம்யஜாமாத்ருத் தனியனின் அநுஸந்தாநாநுஷ்டானமும் அப்ராமாணிகமாகக்கடவதென்று உபபத்திகளுடன் நிர்த்தாரணம் செய்வதன்றோ நிருபகர்களுக்கு அழகு. மேலும் மடத்தாருக்கு ஸர்வாத்மநா ஸ்வாதீனமென்பது காரண

மாகவே இத்தனியன் இப்பொழுது ஸேவிக்கப்பட்டுவரும் திவ்ய தேசங்களில் புகுத்தப்பட்டிருக்கிறதென்று சொல்லில் அப்பொழுது இவர் சொல்லுகிறபடி மடத்துப் பரம்பரையிலுள்ள எல்லா ஸ்வாமிகளின் தனியன்களையும் ஸேவிக்கச் செய்யலாமே. ஏன் அவ்வாறு செய்கின்றிலர் என்பதற்கு இவர் என்ன காரணம் கூறுகின்றார். அப்பொழுது தனியன்களின் ஸங்க்யை அதிகமாகவிருப்பதால் அவ்வளவையும் ஸேவித்துவிட்டு லக்ஷ்மீநாத பத்யம் துடங்க அதிக நாழிகை பிடிக்குமெனக்கருதி ஒன்றான ஸ்வாமி தனியனை மட்டும் அநுஸந்தித்து அதனாலேயே த்ருப்தரானார்களென்பாரேல் மடத்து ஸம்ப்ரதாயத்தில் காலக்ஷேபாரம்பத்திலும் இவ்விதமான லாகவத்தைக் கருதி எல்லாத் தனியன்களையும் ஸேவிக்காமல் நிறுத்தி யிருக்கலாமே. ஆனால் காலக்ஷேபம் ஸாதிக்கும் ஆசார்யபரம்பரைகளில் இன்று எழுந்தருளியிருக்கும் ஆசார்யன்வரைத் தனியன்களை அநுஸந்திப்பது எங்கும் வழக்கமாயிருப்பதால் அவ்வாறு செய்யவில்லையென்று சொல்வது ஸம்ப்ரதாய மறியாதார் வார்த்தையாகும். முதலில் 'ஸ்ரீசைலேத்யாதிப்ரணதோஸ்மிநித்யம்' வரை ஸேவித்துவிட்டுப் பிறகன்றே காலக்ஷேபாசார்யர்களின் பரம்பரைத் தனியன்களை அநுஸந்திப்பது வழக்கமாகவிருக்கின்றது. முதலிலேயே ஸ்ரீசைலபத்யம் துடங்கி வர்த்தமான ஸ்வாமி தனியனளவும் அநுஸந்தித்த பிறகே லக்ஷ்மீநாதபத்யம் ஸேவிக்கப்படும் மடத்து ஸம்ப்ரதாயமே இங்கு குறிப்பிடப்பட்டது. அதில் சிரமத்தைப் பாராட்டினால் ஒன்றான ஸ்வாமி தனியனுடன் மட்டும்நின்றிருக்கலாமே. ஆகையால் முன்னோர்களின் அநுஷ்டானத்தை அநுசரித்து நடந்து வரும் அநுஸந்தான க்ரமங்களில் லாகவத்துக்காக சிலவற்றை விட்டார்களென்றும் சாபலத்தினால் சிலவற்றை கூட்டினார்களென்றும் சொல்லப் புறப்படுவது அவிவேக கார்யமேயாகும்.

22-வது பாராவில் வானமாமலை ஸ்வாமிக்கு அதீநமான தலங்கள் ஒன்றிரண்டே என்று சொல்லி ரம்யஜாமத்ரு பத்யம் அனேக விடங்களில் ஸேவிக்கப் படாமையை அதற்கு ஒரு குறை போலப் பேசுகின்றார். மஹார்க்கமான ரத்நங்கள் வாசியறிந்த சிலரால் மட்டும் போற்றப் படுவது அவைகளுக்கு ஏற்றத்துக்கே உடலாமென்பதை இவர் உணரார் போலும்.

23-வது பாராவில் ஆழ்வார்திருநகரியில் ஸ்ரீஸ்வாமி தனியன் ஸேவிக்க ஆரம்பிக்கப்பட்ட காலம்முதல் அங்கு விவாதமும் இடைவிடாதே நிற்கின்றதென்கிறார். அங்கு இத்தனியன் அநுஸந்தானத்தின் ஆரம்பகாலம் இவருடைய முப்பாட்டனாருக்கும் கூடக்காணவரிதாயிருக்கும்போது இவருக்கு எவ்வாறு ப்ரத்யக்ஷமாயிற்றோவறியோம். அநுமாநாதிகளால் ஒருவாறு அறியப்படினும் அக்காலம் தொடங்கி விவாதமும் அநுவர்த்தித்து வந்தமையை இவர் நிரூபிக்கவல்லரோ. இம்மெய்கலவாப் பொய்யரைப் போலல்லாமல் மிகவும் ப்ராமாணிகாக்ரேஸரரென்றுப் பிரஸித்தி பெற்று எழுந்தருளியிருந்த உபய வேதாந்த வித்வான் காரப்பங்காடு ஸ்ரீ சிங்கப்பெருமாள் ஸ்வாமி தமது 15-வதுமுதல் 65-வது திரு நக்ஷத்ரம் வரைப் பல தடவை ஆழ்வாரை மங்களாசாஸநம் செய்யத் திருநகரிக்கு எழுந்தருளின போதெல்லாம் அங்கு எல்லா ஸந்நிதிகளிலும் அருளிச் செயல் ஸேவா காலங்களில் ஸ்ரீ சைலேசபத்யத்தோடு ரம்யஜாமாத்ருத்தனியனும் யாதொரு விவாதலேசமுமின்றி எல்லோராலும் ஏக கண்டமாக ஸேவிக்கப்பட்டதைத் தாம் நேரில் அநுபவித்ததாகப் பணித்திருக்கும் போது அவ்வூரையே அறியாத இவர் அதற்கு மாறாகப் பேசுவது அபஹாஸ்யமே யன்றோ.

24-வது பாராவில் இவர் சொல்லி யிருப்பது முற்றிலும் பிதற்றலேயாகும். உதாரணமாக எண்டோவ்மெண்ட் ந்யாயஸ்தலத்தில் நடந்த வழக்கில் என்ன முடிவாயிருக்கின்றதென்பதை சுருக்கமாகச் சொல்லுகிறேனென்று ப்ரதிஜ்ஞை செய்து விட்டு மேல் அதைப் பற்றின பேச்சே யில்லாமல் வேறு வாய்க்கு வந்தபடி எத்தையோ பேசுகின்றார். மேலும் திருநகரி கோஷ்டிகளில் ஸ்ரீசைலேச பத்யம் ஸேவிக்கப் பட்டவுடன் அவரவர்கள் தந்தாமிஷ்டப்படி 32அக்ஷரங்களடங்கிய ஏதாவதொரு ஸ்லோகத்தைச் சொல்லிக் கூச்சலிடுகின்றார்களென்றும் சங்ராசார்யர் போல்வாருடைய தனியன்களைச் சொன்னாலும் கேள்வி யில்லை யென்றும் சொல்லி திருநகரியிலுள்ள கோஷ்டியை நிர்வஹிக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களை அவமதித்துப் பேசுகின்றார். இப்படி ஆழ்வார்திறத்திலும் ததாச்ரிதர்கள் திறத்திலும் செய்யப்படுமபசாரமானது அஸஹ்யாபசாரமாகப்பெறுவதால் இதை அவ்வாதிப்பிரானும் பொறுக்க இல்லானாகக்கடவன், மேலும் இப்பாரா

வில் ஆழ்வார் கோஷ்டியில் இவ்விதமான விபரீத கோலாகலங்களைக் கண்டு பெரியோர்கள் மிகவும் வருந்துகின்றார்களென்றும் இதை வானமாமலை ஸ்வாமி நேரில் கடாக்ஷித்தால் ரம்யஜாமாத்ருத்தனியன் ஸேவிக்கப் படுவதாலன்றோ இக்கோஷங்களுக்கு இடமேற்படுகின்றதென்றுணர்ந்து அத்தனியனை அங்கு நிறுத்தி விடவே திருவுள்ளம் பற்றுவரென்றும் அதிலும் இப்பொழுது எழுந்தருளி யிருக்கும் ஸ்வாமி இவ்வீண் வம்புகளில் மிக்க அருவருப்புடையவராகையால் இவைகளை நிறுத்தி யருளக் கூடுமானாலும் சிஷ்யர்களின் பிடிவாதத்தால் அவ்வாறு செய்ய மாட்டிற்றிலரென்றும் படுபொய்களை அடுக்குகின்றார். **एष वन्ध्यासुतो याति खपुष्पकृतशेखरः मृगतृष्णाजलस्नातः शशशृङ्गधनुर्धरः** என்று ஒருவர் கவனம் செய்தாராம். அவர் வகுப்பிலேயே இவர் முதன்மையாக ஓதினவர் போலும். இப்பொய்யுரைகளைக் கேட்டு உண்மை நிலை யறியாதார் ஏமாறவேண்டா மென்று தெரிவித்துக் கொள்வதைத் தவிர இங்கு வேறு சொல்லத் தேவை யில்லை.

ஆழ்வார்திருநகரியில் இவ்விரு தனியன்களின் சேர்த்தி விஷயமான உண்மை நிலையாவது—அங்குள்ள ஸ்ரீவைஷ்ணவர்கள் நெடுநாளாக பரம ப்ரேமத்தோடே ஒருமிடறாக விச்சேர்த்தியை அநுஸந்தித்துக்கொண்டு போரும்போது அங்குள்ள சில ஸ்ரீவைஷ்ணவர்களுடைய திருவுள்ளம் சில வருஷங்களுக்கு முன்பு அங்கு வந்தேறியான சில துரபிமானிகளின் சூழ்ச்சியாலே '**अपहृतजनसौख्यान्मन्थराभेदवाक्या दपि भरतजनन्यां हन्त दौर्जन्यमासीत्** ' என்கிறபடி கலங்கத்தலைப்பட்டது. அக்கலக்கமே சுமார் பத்து வருஷங்களுக்குமுன் சென்னை ஹிந்து மத தர்மபரிபாலன கார்யாலயத்தில் ஒரு வ்யவஹாரமாகப் பரிணமித்து அந்த வ்யவஹாரம் தர்ம ஸம்ஸ்தாபநார்த்தம் அவதரித்தருளிய ஆழ்வார் ஆதிநாதர்களின் க்ருபையினாலும் ப்ராமாணிகாக்ரேஸரர்களான சில மத்யஸ்தர்களின் ஸாக்ஷ்யத்தாலும் இத்தனியன்களின் சேர்த்தி யதாபூர்வம் எல்லா கோஷ்டிகளிலும் தடையின்றி அநுஸந்திக்கப்பட்டே வரக்கடவதென்று தீர்ப்பளிக்கப்பெற்று அநுகூலமானதும் ஔபாதிகமான கைகேயியின் கலக்கம்போல ஸ்வயமே சாந்தமாயிற்று. இந்தத் தீர்ப்பினால் அங்கு முன் அநுஷ்டிக்கப்பட்டுவந்த அநுஸந்தான க்ரமம் ஸ்தூணாநிகநநந்யாயத்தாலே த்ருடீகரிக்கப்பட்டது.

பின்பு அந்த வ்யவஹாரத்தில் உபக்ரமித்தவர்கள் **व्यतिपजति पदार्थानान्तरः कोऽपि हेतुः,** என்ற ந்யாயத்தாலே தம் திருவுள்ளங்களில் பாரம்பர்யமாகப் பெருகுகின்ற ஸ்ரீஸ்வாமி விஷயமான ப்ரேமரஸத்தை சோஷிப்பிக்ககில்லாராய் அநுகபித்துமிருக்கிறார்கள். இனியும் நல்லார் நவில் குருகூராகையாலே அங்குள்ளாரனைவரும் ஆகந்துகர்களான அஸூயாளுக்களின் துருபதேசங்களுக்குச் செவிசாய்க்காமல் **येनास्य पितरोयाता....तेन गच्छन्न रिष्यति।** என்கிற வசநப்படி தம்முன்னோர்களால் அநுஷ்டிக்கப்பட்டுவந்த விச்சேர்த்தி யநுஸந்தானத்தில் நிஷ்டையை யுடையவர்களாய் வாழக்கடவர்கள்.

25-வது பாராவில் ஆழ்வார் திருமுன்பே கண்டார் கண்ட படி கூசல் போடாவண்ணம் நியாய ஸ்தலத்தின் மூலமாக ஒரு சாஸ்வத இஞ்ஜங்ஷன் பெற்று ரம்யஜாமாத்ருத் தனியனை அப்ரதிஹதமாக ஸேவிக்கச் செய்வதுதான் மடத்தாருக்கு ஏற்ற மென்றும் அதையே தாமும் விரும்புவதாகவும் ஒரு வ்யாஜ ஸ்துதியை நிகழ்த்துகின்றார். இது **मनस्यन्यद्वचस्यन्यत्** என்றிருக்கு மவர்களின் கோஷ்டியில் இவர் அக்ரகண்யரா யிருப்பதை விளக்குமே தவிர உண்மையறிந்தவர்களை வஞ்சிக்கவல்லதோ. வழக்கத்துக்கு விபரீதமான கோலாஹலங்கள் நடக்குமானல் இஞ்ஜங்ஷன் பெற்று அவற்றைத் தடுப்பதுதான் ஒழுங்கற்றதாகுமோ. இவர் வகுப்பினர்தாம் பலவிடங்களில் கோயில்களிலுங்கூட இத்தனியன் ஸேவிக்கப்படுவதைக் கண்ணுற்றுப் பொறுமையின் மிகுதியால் அந்த நியாயமான செயலைத்தடுக்க நியாய மார்க்கத்தில் சென்று நியாயாலயங்களில் இன்ஜெங்ஷன் பெறுவது அஸாத்யமென்று நினைத்து ஸ்ரீசைலேசாஷ்டகம் என்ற ஒரு பொய்ச்சுவடியைக் கல்பித்து அதில் ஸ்ரீரங்கநாதனே தனது திருவாயால் ஸ்ரீசைலேச லக்ஷ்மீநாத பத்யங்களுக்கிடையில் வேறொன்றையும் ஸேவிக்கக்கூடாதென்று சொன்னதாக ஒரு நம்பத்தகாத இஞ்ஜங்ஷன் ஆர்டரை வாங்கிவைத்திருக்கிறார்கள். அந்தத் தடை உத்தரவு உண்மையில் பெரிய பெருமாளுடைய நியமனமாக விருக்குமானல், அதன்படி நடப்பது ஸ்ரீசை பத்யத்துக்கு ஒரேற்றமாக விருக்குமானல் வரவரமுனி வைப வத்தை முக்கியமாகப் பேசவந்த பிள்ளைலோகம்ஜீயர் யதீந்த ப்ரவண ப்ரபாவத்தில் அதை ஏன் சொல்லாமல் விடவேண்டும்

ஆஸேது ஹிமாசலம் உள்ள வரவரமுனிபக்தர்களனைவரும் ஏன் ஆதரிக்காம லிருக்கவேண்டும்?

30-வது பாராவில் ஸ்ரீசைலேசாஷ்டகத்தைப்பற்றி விவாதத்தை வளர்ப்பது வீணே. அதில் சொல்லப்பட்ட நிஷேதம் இல்லாத மாத்ரத்தால் ரம்யஜாமாத்ருத் தனியனுக்கு ஒரு அதிகாரம் வந்துவிடுமோ. நிஷேதம் ஒன்று மில்லையென்று வைத்துக்கொண்டு **योनित्यमच्युत** பத்யத்துக்கும் **मातापितायुवतयः** என்ற பத்யத்துக்கும் இடையில் ஏதாவதொரு ஸ்லோகத்தைச் சொல்லலாகுமோ என்கிறார். இங்கு அஷ்டகத்தைப்பற்றின விவாதத்தை வளர்ப்பவர் இவர் வகுப்பினரே தவிர மற்றவரன்று. முதலில் அது ஒரு ப்ராமாணிகமான வநுஷ்டானத்தை தூஷிப்பதாயும் பல தோஷங்களுக்கு இருப்பிடமாகவும் இருக்கின்றது, அது எவ்விதமிருந்தாலும் அதை வெளியில் கொண்டு வராமல் தங்கள் க்ருஹங்களுக்குள்ளேயே வைத்துப் பரம பாவநமாக நினைத்துத் தினமும் பலமுறை இவர்கள் அநுஸந்தித்துப் போகட்டும். அதை தூஷிக்க யார்தான் முன்வருவார் அப்படியில்லாமல் இவர்களே அதை வெளியில் பிரகடனப்படுத்தினார்கள். பிறகு அதனுடைய அபத்தங்களையும் அதில் சொல்லப்படும் நிஷேதத்தின் தன்மையையும் ப்ராமாணிகர்களா யிருப்பார் சிலர் எடுத்துக்காட்ட நேர்ந்தது. அத்துடனாவது இவர்கள் சாந்தியடையாமல் மேலும் அதை ஸமர்த்தநம் பண்ணப் புறப்படுகிறார்கள். இந்த ஸ்திதியில் விவாதத்தை வளர்ப்பவர் யாரென்பதை மத்யஸ்தர்களே அறியக்கடவர்கள். மேலும் ஸ்ரீசைல லக்ஷ்மீநாத பத்யங்களுக்கிடையில் வேறு பத்யங்களை அநுஸந்திப்பது ப்ரமாண மூலமாக விருப்பதுபோல யோநித்ய மச்யுத, மாதாபிதா பத்யங்களுக்கிடையில் வேறொன்றை ஸேவிப்பதற்கு ப்ரமாண மிலாமையால் அதை யார்தான் தகுமென்று சொல்லுவார்கள். ப்ரமாண மிருந்தால் அவ்விடத்திலும் வேறொன்றை ஸேவிப்பதை எவர் தடுக்கவல்லர். ச்ருதி முதலான ப்ரமாணங்களால் ஸித்தமான க்ரமக்லுப்தியை யுடைய ச்ரௌதமான இரண்டு பதார்த்தங்களின் நடுவே அதாவது வேதவேதி கரணங்களுக்கு நடுவில் வேறு ப்ரமாணத்தால் க்ஷுதாசமனம்போன்ற (ஸ்ம்ருதி ப்ரமாணத்தால் வந்த தும்மல் நிமித்தமான ஆசமனம் போல) வேறு அநுஷ்டானம் வந்து புகுங்கால் அத்தை அநு

மதிக்க வேண்டியிருக்கும்போது இங்கு அவ்வாறு செய்யத்தடை ஏது?

31-வது பாராவில் ஸந்நிதிகளில் விலைச் செல்லக்கூடிய தனியன் சிலவேயென்றும் அங்கு ரம்யஜாமாத்ருத் தனியன் ஸேவிக்கப்படாததால் ஸ்ரீவானமாமலை ஸ்வாமிக்கு ஒரு குறையும் வந்திடாதென்றும் விதிக்கின்றார். இப்படி விதிப்பவர் கோவில் களில் சொல்லக்கூடும் தனியன்களுக்கு ஒரு லக்ஷணமும் கூற வில்லையே! அவ்விதம் ஸேவிக்கும்படி ப்ரமாணஸித்தத்வம் என் பதைத்தவிர இவர் வேறு என்ன லக்ஷணம் சொல்லவல்லர். அந்த லக்ஷணம் ப்ரக்ருதத்தனியனுக்கு இல்லாமற்போக வில்லையே. ஆகையால் கோவில்களிலும் ஸேவிக்கப்பட ப்ராப்தி யிருக்கும்போது அவ்விதம் செய்யாமல் விட்டுவிடுவதால் உண்மை யில் ஸ்ரீஸ்வாமிக்குக் குறைவு ஒன்றுமில்லாவிட்டாலும் ஆசார்ய பகவதாஜ்ஞாதிலங்கநத்தாலேற்படும் ப்ரத்யவாயம் அஸ்மதாதி களுக்கு ஏற்படுவது திண்ணமாகையால் அது நேராவண்ணம் ப்ரவ்ருத்தி செய்வது ஆஸ்திகரின் கடமையன்றோ!

ஈற்றுப் பாராவில் ஸ்ரீசைலாஷ்டகம் இல்லையென்றே மடத் தார் உறுதியாகக் கொள்ளட்டும். அதனால் அவர்கள் தனிய னுக்கு என்ன அபூர்வமான அதிசயம் வந்ததாகுமென்கிறார். உண்மையில் புதிதான அதிசயத்தை விரும்புவார் ஒருவருமிலர். ஆனால் சிலர் இவ்வஷ்டகத்தை ப்ரமாணமென்று ப்ரமித்து இது வரைத் தாங்கள் செய்துவரும் ஸஹாநுஸந்தானத்தைத் தவ றென்று நினைக்க நேருமாகையால் அவ்வழியாலே வரும் அநர்த் தத்தைத் தவிர்ப்பதற்காக இதன் அநார்ஜவத்தை நன்கு நிரூபித்து நாடுநகருமறியப் பறைசாற்றியாகவேண்டுமன்றோ. நிகரற்ற வித்தனியனின் பெருமையை நோக்குங்கால் இவ்வஷ்ட கம்போன்ற பல்லாயிரம் சுவடிகள் தோன்றி விஷம ப்ரசாரப் பண்ணினாலும் இதற்கு ஒரு குறைவும் வரவியலாதென்று ஆறி யிருக்கவும் ப்ராப்தம். இதன் ஸஹாநுஸந்தானத்தைத் தவ றென்று காட்டப்புகுந்த இவ்விசாரக்காரரையும் கூட 'உண்மை யில் என்னவதிசயம் இராநின்றதோ அதற்கு ஒரு நாளும் ஒன்று லும் ஹாநியில்லையே' என்று கடைசியில் சொல்லவைக்கு மாகில் இதன் பெருமைக்கு வேறு நிதர்சநம் வேண்டுமோ. 'दीर्घबाहुर्विशालाक्षः' என்று கடுஞ்சினத்தனளான சூர்ப்பணை

யையும் त्वमप्रमेयश्च दुरासदश्च என்று பொடிய வெண்ணின தாரை யையும் சொல்லச் செய்த பெருமாளின் பெருமையை இஃது நினைக்கச்செய்கின்றது. இத்தனியனுக்கு வரவர முனிகளின் தனியனோடு சேர்த்து அநுஸந்திக்கப்படுவதேயன்றோ உண்மை யில் இராநின்ற அதிசயம். வஸ்துஸ்திதி இவ்வாறு இருக்கும் போது இவ்விசாரக்காரர் போல்வாருக்கு இம்மாதிரியான அபதே ப்ரவ்ருத்தி அகார்யகரமென்பதை ஆப்தமுறையில் இங்கு அறிவிக்கலாயிற்று. இவர் முதலில் முகவுரையில் எறும்பியப்பா அருளிச்செய்ததும் அநேக சிஷ்டஜநபரிக்ரஹீதமும் ஸுப்ரஸித் ததமுமான ஸ்ரீசைலேசாஷ்டகத்தை என்று பெரிய ப்ரமாண மாகக்கொண்டாடிப் பேசவாரம்பித்த அஷ்டகத்தை ஓரிடத்தி லாவது ப்ரமாணமென்று நிரூபிக்க முயற்சிக்காததோடு மடத்தா ருடைய க்ரமத்தை தூஷிப்பதற்காகவே ஸ்ரீசைலேசாஷ்டகம் அவதரித்ததென்று துடங்கி 'இது எறும்பியப்பாகாலத்திலன்றி பின்னொரு கால விசேஷத்தில் தோன்றியதாயிருக்கவேணு மென்று சிலரோ பலரோ நிர்த்தாரணம் செய்தாலும் அதை அடி யேனும் ஆமோதிக்கிறே'னென்றும் 'இப்போது ஸ்ரீசைலே சாஷ்டகம் என்கிற க்ரந்தமொன்று அடியோடு இல்லையென்றே வைத்துக்கொள்வோ' மென்றும் 'இது எறும்பியப்பா அருளிச் செய்ததாக விருந்தாலென்ன இல்லாமற் போனாலென்ன? இச் சிறுசுவடி நியாயாலயக்கட்டளையல்ல சுருதி ஸ்ம்ருதி நியமன மல்ல' வென்றும் பலவாறு சொல்லி அந்த க்ரந்தத்தைக் கைவிட நேர்ந்ததும் ரம்யஜாமாத்ருத்தனியனை ஸ்ரீசைலேசத்தனியனோடு சேர்த்துக் கோவில்களிலும்கூட ஸேவிப்பதுதான் தகாதென்ற தமதுகொள்கையைத் தகுந்த ஹேதுக்களால் ஸ்தாபிக்கமுடியா மற்போனதுமே இவருடைய ப்ரவ்ருத்தி அகார்யகரமென்பதற் குத்தக்க நிதர்சனமாகும்.

இவ்வாறு ப்ரதாநத்தை விட்டுவிட்டு அப்ரதாநங்களை கைக் கொண்டு தம் நிலமைக்குத் தகாதபடி வாய்க்கு வந்தவண்ணம் இவர் முகவுரையில் கோஷித்திருப்பது விந்தையினும் விந்தை யாகும். இவர் ஆதரிக்கும் அஷ்டகத்தைத் தூஷித்த தி. சௌ. ஸ்ரீநிவாஸ அய்யங்கார் ஸம்ஸ்க்ருத பாஷையில் சில அபத்தமொழிகளை ப்ரயோகித்துவிட்டாராம். அதைப் பெரி தாக வெடுத்துக்கொண்டு அவர் விஷயமான சில வசைமொழி

களை ஆக்ரஹத்துடன் பகருகின்றார். அவருடைய ஸம்ஸ்க்ருதச் சொற்களிலுள்ள அபத்தங்கள் அவரது அபாண்டித்யத்தைக் காட்டுமாகில் அவரை க்ஷேபிக்க முயன்றவிவர் முதலிலேயே 'தூஷணைகள்' என்று சொல்லித் தமிழிலேயே அபத்த மொழியைக் கூறியிருப்பது இவருடைய பாண்டித்யத்தைக் காட்டவல்லதோ? வடமொழியில் **दूषणा** என்று ஆகாராந்தமான பதமில்லாமையால் தமிழில் தூஷணை என்ற 'ஐ' ஈறு பெற்ற சொல் அபத்தமேயன்றோ. 'தூஷணம் சொல்லும் தொழுத்தைமாரும்' என்றது போன்ற ப்ரயோகங்களும் நோக்கத்தக்கன. மேலும் தாம் ஆதரிக்கின்ற அஷ்டகத்தை அவர் தூஷிக்கிறாரென்று கொண்டு அவர் ஆதரிக்கும் ராமாநுஜஸப்ததியையும் தாம் தூஷித்துவிட வேண்டுமென்று எண்ணி வீணாக சிலதுருக்திகளை உபயோகிக்கின்றார். தத்துவம்தான் விலைச்செல்லுமேதவிர ஆக்ரஹம் விலைச் செல்லாதென்பதை இவர் அறிந்திலரே பாவம்!

இவர் இந்த ஸப்ததி விஷயத்தில் சொல்லியிருக்கும் தூஷணங்களாவன.— 1. இது புதிதாக முளைத்தது 2. இதை ஸமரபுங்கவாசார்யர் செய்யவில்லை 3. இதன் சோதகராகச் சொல்லப்படும் வித்வான் கோபால அய்யங்காரே இதைச்செய்தவர் 4. இதில் சொற்பிழைகளும் எண்ணிறந்தவை என்பன. இவர் இதுவரை இதைக் காதாலும் கேட்டிராததே இது புதிதாகத் தோன்றியதற்குக் காரணமாம். ஆனால் பழைமையான க்ரந்தங்களை முற்றிலும் இவர் கேட்டிருக்கிறாரா. ஒருவருமே கேட்டிருக்கமுடியாது, அச்சுக்குவாராத எவ்வளவு க்ரந்தங்கள் ஆங்காங்கு இன்னும் இருந்து வருகின்றனவென்பது மறுக்கக் கூடுமோ; அச்சுக்கு வந்தவைகளும்கூட எல்லா க்ரந்தங்களும் ஒருவருக்கு எப்படித் தெரிந்ததாக விருக்கமுடியும். இங்ஙிலைமையில் தாம் கேட்டிராததென்ற காரணத்தைக்கொண்டு இதன் பழைமையை இவர் எவ்வாறு மறுக்கத் துணிந்தார்.

இன்னும் **वानाद्रियोगिविषयां रणपुङ्गवनिर्मिताम्। सप्ततिं पठतां नित्यं देवनाथः प्रसीदति ॥** என்கிற இந்த ஸப்ததியின் பலச்ருதி ஸ்லோகத்தில் இது ஸமரபுங்கவாசார்யரால் செய்யப்பட்டதென்று ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்கும்போது அவர் இதைச் செய்யவில்லையென்று கூசாமல் சொல்லுகிறார். இந்த ஸ்லோகத்

தில் இவருக்கு நம்பிக்கை யில்லையாகில் **कालिदास कृते रघुवंशमहा काव्ये, तस्य (श्रीहर्षस्य) प्रबन्धे महाकाव्ये चारुणि नैषधीयचरिते** என்பவைபோன்ற வாக்யங்களிலும் நம்பிக்கை யிழக்க நேருமன்றோ. விசேஷித்து முன்சொன்ன ஶ்லோகத்தைமட்டும் நம்பாமலிருப்பதற்கு என்னகாரணம் காட்டுகிறார்?

மேலும் **वानाद्रिगोपालबुधोपकारात्** என்று ப்ரகாஶகரின் ஶ்லோகத்திலிருப்பதைக்கொண்டு வித்வான் கோபால அய்யங்காரே இதைச் செய்தவரென்று இவர் அறுதியிடுவது பெருத்த ஸாஹஸமாகும். ஸாதாரணமாக ஏட்டுப்ரதிகளிலுள்ளவற்றை அச்சுக்குக் கொண்டு வரும்போது அதில் எழுதுபவரின் அநவதானம் முதலியவற்றால் ஏற்பட்டிருக்கும் பிழைகளைத் திருத்தி உதவுவதாகிய சோதகரின் உபகாரம் எத்தன்மையதோ அவ்விதமான உபகாரமே இங்கு செய்யப்பட்டிருப்பதைப் பாராட்டி இதன் ப்ரகாஶகரான வைஜயந்தீ பத்திராதிபர் அவ்வாறு குறிப்பிட்டிருக்கிறாரென்பதே உண்மையாகும். இந்த ஸப்ததியின் ப்ராசீனமான ஓலைச்சுவடி ப்ரதிகளை எங்கு மெப்போதும் காட்டுவதற்கு ஸித்தமாக விருக்கின்றோம்.

இதில் விரல்விட்டு எண்ணுவதற்குச் சொற்பிழை ஒன்றுகூட இல்லாமையால் அதிலுள்ள சொற்பிழைகளும் எண்ணிறந்தவை யென்று இவர் சொல்லுவது வேறுவிதமாக உண்மையே. ஆனால் அது எண்ணிறந்த சொற்பிழையுடையது என்று இவர் எழுதியிருக்கவேண்டும். சாஸ்த்ரஜ்ஞமர்யாதை யறியாத விவர்மாற்றி எழுதியிருப்பதை மன்னித்து விடுவோமாக. இவர் பிழையாக ப்ரமித்து எடுத்துக்காட்டியிருக்கும் ஒரு உதாஹரணமும் இவரது பிழைப்பையே காட்டுகின்றது காண்மின். இந்த ஸப்ததியில் 9-வது ஶ்லோகத்தில் காணப்படும் **परीपालन** பதம் அஸாதுவாம். இவ்வாறு ப்ரமிப்பதற்கு வ்யாகரண ஸூத்ரத்தை இவர் உள்ளபடி உணராமையே காரணமென்பது அந்த ஸூத்ரத்தைத் திரித்தும் குறைத்தும் இவர் கூறி யிருப்பதிலிருந்து நன்கு வெளியாகின்றது. **सिद्धान्तकौमुदी** என்ற க்ரந்தத்தில் **समासाश्रयविधि प्रकरण**த்தில் இவரெடுத்தெழுதியிருக்கும் ஸூத்ரத்தின் உண்மை வடிவம் **उपसर्गस्य घञ्यमनुष्ये बहुलम्** என்றுள்ளது. இவரோவெனில் **बहुलम्** என்ற சொல்லை அடியோடு விட்டுவிட்டு **उपसर्गस्य** என்ற பதத்திலுள்ள ஆறுவது வேற்றுமையை ஏழாவதாகத்

திரித்துத் தம்மிஷ்டப்படி எழுதியிருக்கின்றார். இதில் बहुल என்ற பதத்தைவிட்டது இவரிஷ்டத்துக்கு ஸாதகமாக விருந்த போதிலும் ஷஷ்டியை ஸப்தமியாக மாற்றினதற்கு யாதொரு ப்ரயோஜனமுமில்லாததோடு ஸூத்ரத்தையே அநர்த்தமாகச் செய்து விட்டபடியால் இங்கு இவரது அறியாமையே வெளியா கின்றதென்பது மிகையாகாது. அந்த ஸூத்ரத்தில் भट्टोजि தீக்ஷிதர் **परीपाकः परिपाकः** என்று உதாஹரித்து **घञ्** ப்ரத்யயாந்த மான **पाकशब्द**ம் மேலே இருக்கும்போது பரி என்ற உபஸர்க் கத்தின் இகாரத்துக்கு விகல்பமாக **दीर्घ** வந்திருப்பதைக் காட்டியிருக்கின்றார். விகல்பம் மட்டும் ஸூத்ரகாரருக்கு இஷ்ட மாக விருக்கும் பக்ஷத்தில் **बहुलम्** என்ற பெரியசொல்லை விட்டு விட்டு **वा** என்ற சிறு சொல்லையே உபயோகித்திருப்பார். **अर्धमात्रालाघवेन पुत्रोत्सवं मन्यन्ते वैयाकरणाः** என்றல்லவோ ப்ரஸித்தி. **क्वचित्प्रवृत्तिः क्वचिदप्रवृत्तिः क्वचिद्विभाषा क्वचिदन्यदेव** என்று சொல்லப்படும் பஹுலக்ரஹண பலங்களில் ஒன்றாகிய **विभाषा** என்னும் விகல்பத்தை மட்டுமே பலமாகக் கருதி இங்கு பஹு லக்ரஹணம் பண்ணினுரென்று சொல்லவொண்ணுது. ஆகை யால் **क्वचिदन्यदेव** என்றதை அநுஸரித்து **ल्युट्प्रत्ययान्त** மான **पालनादि** பதங்கள் மேலிருக்கும் பொழுதும் முன் சொன்ன தீர்க்கம் வருவது உசிதமென்றே ஏற்படுகிறது. ஆனுல் அதற்கு உதாஹரணம் அரிதென்று நினைத்து தீக்ஷிதர் விட்டு விட்டார் போலும். ஸர்வஜ்ஞர்களான நமது பூர்வர்களின் ஸூக்திகளில் அவ்வித உதாஹரணம் காணக்கிடைத்தால் அதைத் தலைமேல் புனைந்து களிப்பதன்றே விசேஷஜ்ஞரின் கடமை. இப்படியிருக்க இந்த **परीपालन** பதத்தை அஸாதுவென்று கழித்துக் கூறுவது யாருடைய பிழையென்பதை மத்யஸ்தர்களே அறியவேணும்.

இன்னும் இந்த ஸப்ததியில் தேவநாயகனின் நியமன மென்று ஒரு ஏகதேச நியமனத்தைக் கல்பனை செய்தவர்கள் ஆசைதீரக்கல்பனை செய்யக்கூடாதா வென்று கேட்கின்றார். கல் பனை செய்யும் வழக்கமுடைய இவர்போல்வார் ஒரு பொய்யைக் கட்டி விடும்போது அது ரங்கநாதனின் ஆணையென்றே அல்லது பரமபத நாதனின் ஆணையென்றேதான் கல்பிப்பார்களென் பதில் சிறிதும் ஐயமில்லை. ஆனுல் வஸ்துஸ்திதியை அபலபிக்க விரும்பாதவர்கள் உள்ளதை உள்ளபடியே யன்றே சொல்லு

வார்கள். அதிலும் போரேற்று நாயனார் போன்ற பெரியோர்கள் இல்லாதவற்றைக் கல்பிக்க ப்ரஸக்தி தானேது. ஆக இந்த ஸப்ததி விஷயத்தில் இவர் கூறுவது முற்றிலும் துர்வாதமே யாயிற்று.

இனி இவர் ஆதரித்துப் போரும் அஷ்டகத்தின் தன்மையைச் சிறிது விளக்குகின்றேன். இது முற்றிலும் ஒருவரால் செய்யப்பட்டதேயில்லை. மணவாள மாமுனிகள் விஷயமாகவும் ஸ்ரீசைலேசத் தனியன் விஷயமாகவும் முன்னோர்களின் கூற்றாகவெடுத்து யதீந்த்ரப்ரவண ப்ரபாவத்தில் பிள்ளைலோகஞ் ஜீயரால் கையாளப் பட்டவையும் ஸர்வ ஸம்ப்ரதி பந்நங்களுமான நான்கு ஶ்லோகங்களோடு தன்கைச் சரக்கான வேறு நான்கு ஶ்லோகங்களைக் கூட்டி ரம்யஜாமாத்ரு பத்யம் ஸ்ரீசைலேசபத்யத்தோடு சேர்ந்து ஸேவிக்கப்படுவதை ஸஹியாத ஒரு அர்வாசீனர் அஷ்டகமாகக் கட்டிவைத்ததத்தனையேயாகும். அவற்றுள் முன்னோர்களின் ஸூக்திகளா யிருக்கும் ஶ்லோகங்கள் அதிக ஸௌஷ்டவாகவில்லாத போதிலும் அவை சிஷ்ட பரிக்ரஹீதங்க ளென்னும் முறையில் அவற்றை நாம் அதிகமாக ஆராயக்கடவோமல்லோம். பின்னால் எழுதிச் சேர்த்த ஶ்லோகங்களாவது நன்றாக அமைந்திருக்கக் கூடாதா. இந்தப் பத்யங்களின் தொகுப்பாவது அடைவு பட்டிருக்கலாகாதா. இது ஆக்ரஹபாரவச்யத்தினா லேற்பட்ட தடுமாற்றமோ அல்லது ப்ரம்மாவிடம் வரங்கேட்கப் புகுந்த கும்பகர்ணனைப் போல இக் கவியையும் வாக்தேவதையையே தடுமாற வைத்தனளோ.

முதலில் **शेषः श्रीमान्** என்ற பத்யம் மாமுனிகளுடைய ஆதிசேஷாவதாரத்வத்துக்கு ப்ரமாணமாக விளங்குகின்றது. அதற்கு ஸ்ரீசைலேச பத்யத்தின் மகிமையைச் சொல்லவந்த விவ்வஷ்டகத்தில் சேர்க்கப்படுவதற்குத் தேவையில்லை. மேலும் ஆதிசேஷன் வரவரமுனியாக விளங்கிக்கொண்டு சக்ரவர்த்தித் திருமகனாருடைய பீடத்தை அடைந்து எங்களை ரக்ஷிக்கின்றானென்று சொல்லு மிப்பத்யத்துக்கும் மாமுனிகளிடமிருந்து திருவாய்மொழியின் வ்யாக்யானத்தைக் கேட்க எனக்கு விருப்பமிராநின்றது. ஆகையால் அவரைக் கருடமண்டபத்துக்கு அழைத்து வாருங்களென்று கட்டளையிட்ட அரங்கன் அவ்வாறே ஒருவருஷ காலம் கேட்டானென்கின்ற **श्रोतुं द्राविडवेद** என்கிற இரண்டா

வது பத்யத்துக்கும் என்ன ஸம்பந்தம்? இந்தக் கூடாமையை நீக்குவதற்காக ஒரு பெரியார் இந்த முதல் ச்லோகத்தை இதி லுள்ள **रक्षति** என்ற பதத்தை **रक्षतु** என்று படித்துக்கொண்டு மங்கள ச்லோகமென்று சொல்லி மழுப்புகிறார். ஸ்ரீசைலேசபத்ய விஷயமான அஷ்டகமென்ற விதில் எட்டு ச்லோகங்களும் அப் பத்யத்தைப் பற்றிச் சொல்வனவாக விருக்க வேண்டாவோ. அதற்கு ஸம்பந்தமில்லாமல் மங்கள ச்லோகமாக ஒன்று கழிந்து விட்டால் இது ஸ்ரீசைலேச ஸப்தகமேயாகக் கடவது. **देवराजाष्टकम्, कान्ताचतुःश्लोकी, सुदर्शनाष्टकम्, क्षमाषोडशी** போன்ற க்ரந்தங்கள் எப்படி யமைந்திருக்கின்றன வென்பதைச் சற்று நோக்கிடுக. ஒருக்காலிங்கு பெயரிலும் தடுமாற்றமோ.

மேலும் வ்யாக்யானத்தைக் கேட்டதாகச் சொல்லு மிவ் விரண்டாவது ச்லோகத்துக்கு, கேட்க விரும்பினதாகவும் சிஷ்யத்தன்மையை ஆசைப்பட்டதாகவும் சொல்லும் ச்லோகங் களுக்கு முன்னால் சேர்க்கப்படுவதற்கு என்ன ஔசித்ய மிருக் கின்றது. இந்த அநௌசித்யத்தை அவர் இரண்டு விதமாகப் பரிஹரிக்க முயல்கின்றார். **अशृणोत्** என்ற பதத்துக்கு கேட்க ஸங்கல்பித்தானென்று பொருள்கொள்ள வேணுமென்பது ஒரு வழி. இது நேர்வழியில்லை. ஸங்கல்பித்தானென்று இந்த ச்லோகத்தில் சொன்னக்கால் ஸங்கல்பித்தபடியே கேட்டா னென்று வேறு ஒரு ச்லோகத்தில் சொல்லவேண்டாவோ. மேல் அவ்வாறு சொல்லும் ச்லோக மொன்றுமில்லையே. 'சுருங்கச் சொல்லல் விளங்கவைத்தல்' **इष्टं हि विदुषां लोके समासव्यासधारणम्** என்ற முறையில் கேட்டானென்று முதலில் சொல்லிவிட்டுக் கேட்ட ப்ரகாரத்தை மேல் விரிவாகச் சொல்வதும் ப்ரஸித்தமே யென்பது அவருடைய இரண்டாவது வழியாகும். இதுவும் இங்கு செல்லத்தகாத வழியேயென்பது அடியேனுடைய துணிபு. அப்பொழுதும் மேலில் விரிவாகச் சொல்லுமிடத்தில் கேட்டா னென்று சொல்லும் ஒரு வார்த்தையாவது வேண்டாமா. இவை ஆர்ஷமாகவோ ஆர்ஷ ப்ராயமாகவோ இருக்கின்ற க்ரந்தங்க ளோடு இதை ஒப்பிடுவது சரியில்லை. ஒப்பிட்டாலும் அதாவது பொருந்தி யிருக்கவேண்டாமா. திருவாய்மொழியில் அதைச் சொல்ல வாரம்பித்தது முதல் பலவிடங்களிலும் குருகூர்ச் சடகோபன் சொன்னவென்று காணப்பட்டாலும் முடிவிலுப

குருகூர்ச் சடகோபன் சொன்ன அவாவிலந்தாதி யென்று அருளியிருப்பதும் ஸ்ரீராமாயணத்தில் பம்பா ஸரஸ்ஸைக் காண்பதற்கு முந்தியே **ददर्श** வென்று ப்ரயோகிக்கப்பட்டிருந் தாலும் கடைசியாகப் பார்ப்பதைச் சொல்லுமிடத்திலும் அப் பதம் வந்திருப்பதும் காண்க. அதுபோல, இங்கு மேலிலும் **अश्रृणोत्** என்றோ **अश्रौषीत्** என்றோ பதங்களொன்றுமில்லையே. **श्रीभूभ्यां** என்ற மூன்றாவது ஸ்லோகத்தில் மாமுனிகள் ஈடு ஸாதிக்கும் ஸந்நிவேஸத்தை த்யாகிப்பதாகச் சொல்லும் முகத் தாலே அவர் திருவாய்மொழிப்பொருளை யருளிச்செய்து வந்தா ரென்கிற கதாபாகம் சொல்லிற்றாயிற்று எனக்கொள்ள வேணு மென்கிறார். இந்த வர்த்தத்தை இப்பெரியவர் சொல்வதற் காகக் கொள்ளவேண்டுமேயொழிய இது ஸ்லோகத்தின் சப்தத்தி லிருந்து கிடைக்கக் கூடியதாயில்லை. **रङ्गनाथे व्याक्रियां श्रोतुकामे यः अग्रे वर्तते तं स्मर** என்றிவ்வளவே அங்குள்ளது. **श्रोतुकामे** என்பதற்குக் கேட்கும்போது என்று அர்த்தம் கொள்ள வேணு மென்கின்றாரா. அதைவிடப் பாடபேதம் பண்ணுவது இவருக்கு ஸஹஜதர்மமாக விருக்கும்போது அந்த முறையையே இங்கும் கையாண்டிருக்கலாமே. ஆக ஸ்லோகங்கள் இருந்த விருப்பில் இந்த இரண்டாவது மூன்றாவது ஸ்லோகங்களுடைய க்ரமம் வ்யுத்க்ரமமேயாகும். மேலும் **श्रीभूभ्यां** என்ற இந்த மூன்றாவது ஸ்லோகம் இந்த அஷ்டகத்தைத் தொகுத்தவருடைய சொந்தக் கவனமேயாகும். இது யதீந்த்ர ப்ரவணப் ப்ரபாவத்தில் காணப் படவில்லை. அதில் காணப்படும் ப்ராசீன ஸ்லோகங்களில் கழிந்த காலத்தைக் காட்டக்கூடிய லகார ப்ரயோகங்கள் அமைந்திருக்க இதில் வர்த்தமான காலத்தைக் காட்டும் **லட்** ப்ரயோகிக்கப்பட் டிருப்பது இக்கர்த்தா தம்மை வரவரமுனிஸமகாலிகராகக் காட் டிக்கொள்ள வேணுமென்று ஆசைப்பட்டமையையே விளக்கா நின்றது. இதனை ஶிரோபூஷாகாரர் எவ்வளவு மறுக்க முயன் றாலும் அது ஸாத்யமாமோ! 'நிற்கப் பாடி என்னெஞ்சுள் நிறுத்தினான்' என்று கழிகால ப்ரயோகம் செய்திருந்தாலும் அது நிறுத்தினமையின் கழிகாலத்தை மட்டுமே காட்டுமல்லது நிறுத்தினவரான ஆழ்வாருடைய கழிகாலத்தைக் காட்டவல்ல தன்று. அதுபோல் **वत्सरमेकमश्रृणोत्** என்பது சிரவணத்தின் கழிந்தமையையே காட்டும். மாமுனிகளின் கழிந்தமையையோ

கேட்ட வரங்களின் கழிந்தமையையோ காட்டாதென்று இந்த **भूषा**காரர் அறிந்திருப்பதுபோல இந்த அஷ்டகக்காரர் அறிந் திருந்தால் இந்தஶ்லோகத்தை கல்பிக்க முயன்றிருக்கவே மாட் டார். மேலும் அன்று அரங்கனுக்கு எதிரில் மாமுனிகள் நின்றது பாவநாப்ரகர்ஷத்தாலே இக்கவிக்கு இன்று நிற்பதுபோலத் தோன்றுகிறதென்று சொல்லி இவருடைய மனோபாவத்தை ஆழ்வார்கள் பாவநா ப்ரகர்ஷத்தோடு ஒப்பிடுகிறார். இதெல் லாம் இவருடைய பாண்டித்யத்தை வெளிப்படுத்துகிறதே யொழிய மூலகாரரின் அபாண்டித்யத்தை மறைக்க வியலாது. ஆழ்வாருடைய நிலைமையிலிருப்பவரா ஹடாத்காரத்தால் **श्रीशैल लक्ष्मीनाथपद्य**ங்களுக் கிடையில் வேறு பத்யங்களை ஸேவிப் பவர்களை ஆக்ரோசத்துடன் திட்டத் தலைப்பட்டார்.

இவ்வஷ்டகத்தில் **कृपया परया** என்ற நான்காவது ஶ்லோக மும் அடைவுகேட்டுடனேயே அமைந்திருக்கின்றது. சிஷ்ய பாவத்துடன் அர்த்தங்கேட்ட பிறகு சிஷ்யத்தன்மையை ஆசைப் பட்டானென்று சொல்வது பொருந்துமா. இதன் வ்யாக்யா தாவும் இரண்டாவதுஶ்லோகத்தில் **यथोक्तक्रमात्** என்ற விடத்தில் **अप्रस्खलितशिष्यमर्यादः सन्** என்று சிஷ்ய பாவத்துடன் கேட்ட தாகவே அர்த்தம் செய்திருக்கிறார். அப்படியிருக்க பூஷா க்ரந்தத்தில் ‘நம்பிள்ளை’ போல்வாரிடத்திலே கேட்டதுபோல மாமுனிகளிடத்திலும் திருவாய்மொழிப் பொருள் கேட்கவேணு மென்று ஆசைப்பட்டிருக்கலாம். பின்னர் கேட்டுத் திருவுள்ளம் கனிந்தவாறே சிஷ்ய வ்ருத்தியில் ஊற்றமுண்டாகி யிருக்கலாம் என்று அவரே அதற்கு மாறாகப் பேசுகிறார்.

இன்னும் இந்த ஊற்றம் முன்னமே உண்டாகியிருந்தாலும் இப்பொழுது தனியனருளிச்செய்ய உபக்ரமித்தகாலத்தில் தான் அது விளங்கினபடியால் இப்பொழுதுதான் உண்டானதாகவும் சொல்லலாம் என்கிறார். இஃது ‘**ज्ञानसमकालसत्ताकत्वमेव वस्तूनाम्**’ என்கிற பாஹ்யமதத்தைத் தழுவிய கூற்றுப்போலும். எப்படி யாவது மூலத்தை ஸரிக்கட்டிவிட வேணுமென்ற அபிநிவேசத் தால் **यया कयाचन विधया** என்ற ந்யாயத்தை அவலம்பித்துப் பேசுவது அபிஜ்ஞர்களுக்கு அழகில்லை. இங்கு **शिष्यताम्** என்ற பதத்துக்கு சிஷ்ய பாவ ப்ரகாசனத்தை என்று திரித்து அர்த்தம் கூறிவிடுவது இதைவிடச் சிறந்த வழியாகும்.

**समाप्तौ ग्रन्थस्य** என்ற ப்ராசீன ஸ்லோகம் சிஷ்ய பாவத்தை ஆசைப்பட்டதாகச் சொல்லும் **कृपया परया** என்ற பத்யத்துக்கு அடுத்தபடியாக அடைவுகெடச் சேர்க்கப்பட்டிருக்கின்றதென்பதைத் தவிர இது விஷயமாக சிரோமணி ஸ்வாமி செய்திருக்கும் விமர்சனங்களுக்கும் பூஷாகாரர் செய்திருக்கும் அவற்றின் மறுப்புகளுக்கும் இடமேயில்லையென்பது அடியேனது கொள்கை. **जगौ** என்பதற்குக் கர்மாவாயிருப்பது ஸ்ரீசைலேச பத்யமாகையால் அது கான யோக்யமாயிருப்பதால் பூரிப்ர யோகாநுஸாரேண ஸித்தமான கானார்த்தத்தைக் கொள்ளத் தட்டில்லை. இப்படியிருக்க அப்பதத்துக்கு வ்யாக்யானம் செய்யும்போது **उक्तवान्** என்று அர்த்தம் சொல்லவும் வேண்டாம். ஒருக்கால் அநவதாநத்தால் அவ்விதம் சொல்லியிருந்தாலும் இங்கு விமர்சனகாரர் **उक्तवान्** என்று வ்யாக்யானிப்பதைவிட **गीतवान्** என்று சொல்வது சிறந்ததென்று மட்டும் குறிப்பிட்டு நிற்கவமையும். **गैशब्दे** என்று சப்த மாத்ரத்தில் அநுசாஸநமிருந்தபோதிலும் கானரூபமான சப்த விசேஷத்தில்தான் **गायति** ப்ரயோகம் ஆங்காங்கு செய்யப்பட்டிருக்கின்றமையால் **जगौ** என்பதற்குச் சொன்னனென்று அர்த்தமுண்டென்று ஸாதிக்க் பூஷாகாரர் முயல்வது வ்யர்த்தமே. **अनन्याधीनत्वं तव किल जगुर्वैदिकगिरः** என்பதுபோன்ற அவரெடுத்துக்காட்டிய உதாஹரணங்களிலும் கானார்த்தமே தேறி நிற்கக்கூடியது. இங்கு **वैदिकगिरः** என்பதற்கு வேதமந்த்ரங்களென்பதே பொருளாகையால் அதில் பாதபத்தமான ருக்ரூபமான கானார்ஹமான மந்த்ரங்கள் பஹுவாக விருப்பதால் **जगुः** என்பதற்குப் பாடினவென்றே பொருள் கொள்ளத்தகுந்தது. இதுபோல இன்னும் பலவிடங்களிலும் கானார்த்தத்தையே காட்டலாம். விரிவுக்கஞ்சி விடுக்கின்றோம்.

இந்தஸ்லோகத்தின் கடைசியில் அமைந்திருக்கும் **इदं** என்ற பதமும் **श्रीमान् रङ्गेश्वरः** என்ற அடுத்தஸ்லோகத்தோடு இதற்கு ஸம்பந்தமில்லையென்ற உண்மையை விளக்குகின்றது. அடுத்த ஸ்லோகம்முன்னோர்களால் கையாளப்படாமையால் அது இந்த அஷ்டகக்காரரின் சொந்தக்கவியேதான். **इदम्** என்று சொன்னவர் எதை என்னும் ஆகாங்க்ஷைக்குப் பூரகமாகவன்றோ மேல் ஸ்லோகமிடவேணும். **श्रीशैलेश** பத்யத்தை முழுவதும் சொல்லி

**इति** என்று கூறுதவரை இந்த **इदं** பதத்தின் ஆகாங்க்ஷை சமிக்
காது. ஆனல் மேல் ஶ்லோகத்தில் **श्रीशैलेशेतिपद्यं** என்றிருப்ப
தால் அதை இந்த **इदं** சப்தம் ஏன்பராமர்சிக்காதென்று கேட்
கின்றார் வ்யாக்யாதா. அது **उक्त्वा** என்பதற்குக் கர்மஸமர்ப்பக
மாய்க்கொண்டு அங்கு அந்வயித்து விட்டபடியால் **इदं** சப்த
விவரணமாய்க்கொண்டு இங்கும் அந்வயிக்க யோக்யமில்லாமற்
போய்விட்டது. **न ह्यन्योपसर्जनमन्यत्र विशेषणतयाप्यन्वेतुमलम्** என்
றல்லவோ வஸ்துஸ்திதி. மூலமான அஷ்டகத்திலிருக்கும் அபி
நிவேசமானது வ்யாக்யாதாவுக்கு இந்தவிஷயத்தை மறைத்து
விட்டதுபோலும். இப்படியிருக்க வ்யவஹிதமாயும் அந்யபரமாயு
முள்ளவற்றை **इति इदं** சப்தங்கள் பராமர்சிக்கக்கூடுமென்று
வீணாகவாதம் செய்கின்றார். ஸ்தோத்ர ரத்னத்தில் **दुरन्तस्यानादेः**
என்ற ஶ்லோகத்தில் **इतीच्छामि** என்றவிடத்திலுள்ள **इति** சப்தம்
மிகவும் தூரஸ்தமான ஓரிச்சையை ப்ரதிபாதிக்கின்றதாம் ஒருக்
காலுமில்லை. அங்கு பூர்வம் **न देहं न प्राणान्** என்ற ஶ்லோகத்தில்
வெளியிடப்பட்ட பகவச்சேஷத்வத்துக்கு அசலான தம்முடைய
ஆத்மாத்மீயங்கள் முற்றிலும் அடியோடு ஒழியவேணும் என்ற
ஆசையையே தான் இந்த **इति** சப்தம் பராமர்சிக்கின்றது.
"அசுபாஸ்பதமான வென்னை நினைத்தஞ்சாதே தேவரீர் குண
கணத்தை நினைத்து நதேஹம் நப்ராணான் என்கிறபடியே இச்
சியாநின்றேன்" என்றுதான் இங்கு பூர்வர்கள் வ்யாக்யானம்.

மேலும் இக்கிரந்தத்துக்கு ஸ்ரீசைலேசாஷ்டகம் என்று
பெயரிருப்பதால் இதில் சொல்லப்பட்ட **इदं** சப்தம் **श्रीशैलेश**
பத்யத்தைக் குறிப்பிடலாமென்கிறார். இப்படியும் ஜ்ஞாதாக்
களாயுள்ளவர்கள் சொல்லத்தகுமோ? இந்த அஷ்டகத்தில் கீழில்
ஒரு ஶ்லோகத்திலாவது ஸ்ரீசைலேசபத்யத்தைப்பற்றின
பேச்சே இல்லாமலிருக்கும்போது **इदं जगौ** என்றவிடத்தில் இதம்
என்பதற்கு ப்ரக்ருதஶ்லோகத்தை என்று எவ்வாறு அர்த்தம்
கொள்ளலாகும். கோதண்டராமஸ்தோத்ரமென்று ஒன்றுக்குப்
பேர்வைத்து அதில் **तं नमामि, इमं वन्दे** என்று ப்ரயோகித்துவிட்
டால் அந்தத் **तदिदं** சப்தங்கள் கோதண்டராமனைக் காட்ட
வல்லனவா? ஸ்ரீபாஷ்ய வாக்யார்த்தம் நடக்கும் ஸதஸ்ஸில்
அது முடிந்ததும் ஒருவர் நானும் வாக்யார்த்தம் சொல்லுகிறே
னென்று சொல்லிவிட்டு **तत्** என்றாராம். தத்பத்துக்கு வக்த்ரு

புத்திவிஷயமாயிருப்பது அர்த்தமாகையால் இதுகாறும்சொன்ன வாதிகளுடைய வசனத்தையே அவர் புத்தியில் கொண்டமையால் அதுவே அவர் சொன்ன தத்பதத்துக்கு அர்த்தமாகக் கடவதாம்.

நிற்க, இவ்வஷ்டகத்தில் 6, 7, 8 வது ஶ்லோகங்கள் அமைந்திருக்கும் ரீதியைப் பார்த்தால் அவை இக்கவியால் உண்டு பண்ணப்பட்டவைகளே என்பதற்கு எள்ளளவும் ஸந்தேகமில்லை. என்னே க்ருதிஸௌஷ்டவம்! என்னே அர்த்த ப்ராமாண்யம்! ஶ்லோகம் 6ல் யத்தத் பதங்கள் அமைந்திருக்கும் சீரும் ஸௌம்யோபயந்தா: என்றால் முனி பதார்த்தத்தோடு ஏக தேசாந்வயம் வருமெனக்கருதி அதைப் பரிஹரிப்பதற்காக ப்ரதமாந்தமாகப் படித்துக் கொண்டிருப்பதும் **खगपतिनिलये मण्डपे** என்று பூர்வம் **ताक्ष्यार्श्रयं मण्डप** மென்று சொன்னத்தையே புண்யமாக ஶ்லோகித்திருப்பதும் **तत्तदादौ** என்று அருளிச்செயல் முதலானவற்றை **तत्तत्** பதத்தினால் குறிப்பிட்டிருக்கும் அழகும் வாசாமகோசரம். **रङ्गेश्वरः** என்று சொல்லியிருந்தும் **सौम्योपयन्ता** என்று அழகிய மணவாளனின் பெயரை மற்றொரு முறை அநுஸந்திப்பது பக்தி பாரவச்யகார்யமே. ஒரு ரங்கராஜஸஹஸ்ரநாமங்கூட இங்கு இவர் பணிக்கப்போரும். 7-வது ஶ்லோகத்தில் வேதங்களின் ஆரம்பத்தில் ஹரி: என்று சொல்லிவிட்டுப் பிறகு ஓமென்று சொல்லாதவன் துர்ஜனன் என்று ஸுஜந பதத்தாலே ஸூசிப்பித்து ஸ்ரீசைலேச லக்ஷ்மீநாதபத்யங்களை அவ்யவதாநேந ஓதாதவர்கள் ஸத்ஸம்ப்ரதாய நிஷ்டர்களல்லவென்று **सतां सम्प्रदायैकनिष्ठैः** என்று குறிப்பிட்டிருப்பதும் 8 வதில் ஹரி பதத்துக்கும் ப்ரணவத்துக்கும் நடுவில் க்ருஷ்ணேதி பதங்களை ப்ரயோகிப்பவர்கள் வைதிகர்களாகவும் ப்ரும்ம நிஷ்டர்களாகவும் எவ்வாறு ஆக மாட்டார்களோ அவ்வாறே ஸ்ரீசைலேச லக்ஷ்மீநாத பத்யங்களுக்கிடையில் வேறு பத்யத்தைச் சொல்லுமவர்கள் ரங்கேச பக்தர்களாகவும் சமதம நியதர்களாகவும் ஸாதுக்களாகவும் தத்வவித்துக்களாகவும் ஆகமாட்டார்களென்று காண்பித்திருப்பதும் த்ருஷ்டாந்த தார்ஷ்டாந்திகங்களின் பொருத்தமுடைமையும் இக்கவியின் திறமையை வெகுதூரம் விளக்காநின்றது. இவ்விதம் மிகப்பொருத்தமான கட்டளையை அரங்கனைத்தவிர வேறு யாரே செய்யவல்லர் என்று நினைத்து இதை பகவதாஜ்ஞையாகவேகூறி

யிருப்பதும் ஒரு சாதுர்யம். இந்த ஸ்ரீசைலேசபத்யத்தை எல்லா திவ்ய தேசங்களிலும் அருளிச்செயலின் ஆரம்ப காலத்தில் நியமேந ஓதவேணுமென்ற 6-வது ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட கட்டளை யதீந்த்ரப்ரவணப்ரபாவத்தில் ஸேனை முதலியாரின் ஸ்ரீமுகமாக விடுக்கப்பட்டதாகச் சொல்லப்படும் அரங்கனின் ஸத்வாரகமான ஆஜ்ஞையையே குறிப்பிடக்கடவதானாலும் இந்த 7, 8 வது ஶ்லோகங்களில் சொல்லப்படும் ஆணை அவ்வாறு ஸத்வாரகமாக ஆகிவிடக்கூடாதென்று இதன் பெருமையை விளக்குவதற்காக ஸ்வயம் என்று அவன் நேரில் உத்தரவிட்டதாகச் சொல்வது என்னமேம்பாடு? இவ்வாறு பரஸம்ருத்தியில் நெஞ்சு வீங்கப்பெற்ற இவ்வஷ்டகக்காரர் போன்றபெரியார்களுடைய கர்த்ருத்வத்தில் ஈஶ்வரனும் அநுமந்தாவாய்க்கொண்டு கலந்துகொள்கிறானென்று சொல்லப்படும் சாஸ்த்ரார்த்தத்தை ஸம்ஸ்க்கரித்து ஸர்வகார்யங்களிலும் முதல் கர்த்ருத்வம் எம்பெருமானுக்கேயுளதென்று காண்பித்திருக்கும் இக்கவியின் வேதாந்த பாண்டித்யத்துக்கு என்ன பாசுரமிடுவது; தம்முன்னோர்களுடைய உக்திகளிலிருந்து தெரிந்து கொண்டவற்றைத் தொகுத்து யதீந்த்ரப்ரவணப்ரபாவமென்ற க்ரந்த ரூபமாகக் கல்பித்துவைத்த பிள்ளைலோகஞ்ஜீயர் ஸ்ரீசைலேசபத்யத்தை லக்ஷ்மீநாதபத்யத்தோடு சேர்த்து அவ்யவதாநேநபடிக்காதவர்கள் அஶிஷ்டர்களென்று திட்டியிருக்குமதாய் தமக்கு அத்யந்தம் உபாதேயர்களான பூருவர்களில் ஒருவரான வரதராஜகுருவால் ஸாக்ஷாத் அரங்கனுடைய நியமனமாகப் பட்டயம் செய்து வைக்கப்பட்டதுமாய் இருக்கும் இந்தப் பெரிய விஷயத்தை **अनुक्तमन्यतो ग्राह्यम्** என்ற ந்யாயத்தைக்கொண்டு பூஷாகாரர்போல்வார் ஸமர்த்திக்கும்படி தம் க்ரந்தத்தில் சொல்லாமல் விட்டுவிட்டது அத்யந்தம் சோசநீயமே. ஒருக்கால் இப்பத்யங்களுக்கிடையில் ரம்யஜாமாத்ருபத்யம் போன்றவற்றை ஸேவிப்பது அவருக்கும் இஷ்டமோ அல்லது ஒருவேளை மடத்தாருடைய தயவை எதிர்பார்த்துக்கொண்டு **रामाय स्वस्ति रावणायस्वस्ति** என்பாரின் கோஷ்டியில் அவரும் சேர்ந்தவரோ. அஷ்டகத்தில் ஒரு அபிநிவேசம் விழுந்துவிட்டால் அதற்கு அநுகுணமாக எவ்வித ஊகத்தையும் செய்துவிடலாமன்றோ. ஆக இவ்வஷ்டகத்தை ஆதரிக்கவெண்ணி இதன்வ்யாக்யாதாவும் சிரோ

பூஷாக்ரந்த கர்த்தாவுமான பெரியார் ப்ரவ்ருத்தித்ததிலிருந்து அவரது ப்ராமாணிகத்தன்மையைத் தளரவிட நேர்ந்ததைத்தவிர இதன் தோஷங்கள் மறைந்தபாடில்லை. இன்னும் இவ்வஷ்டகத்தை ஆதரிக்கும் க்ரந்தங்களின் விஷயமாகத் தெரிவிக்க வேண்டிய அபிப்பிராயங்கள் பலபலவிருக்கின்றன. இஃது பாரதமாகாவண்ணம் அவற்றைப் பன்னி யுரைக்கிலோமிங்கு.

ஆனால் ஒன்றுமட்டும் சொல்லாமலிருப்பதற்கில்லை. இவ்வஷ்டக் விஷயமாகவும் அதன் வ்யாக்யாந விஷயமாகவும் விமர்சித்து விமர்சனகாரர் வெளியிட்டிருக்கும் தூஷணங்களில் சில பரிஹரிக்கக்கூடியதாயிருந்தாலும் சில பரிஹரிக்கப்பட்டிருந்தாலும் பல தூஷணங்கள் நேர்வழியில் பரிஹரிக்கக் கூடாதவைகளேயாகும். அவருடையலேகத்திலும் சிலகுறைகள் உண்மையில் தென்படவே செய்கின்றன. ஓரிடத்தில் நையத்தியநியமம் என்கிறார். அஷ்டகத்தில் சொல்லப்படும் **श्रीशैललक्ष्मीनाथ** பத்தியங்களின் அவ்பவதான நியமம் அர்த்ததுக்கா சப்தத்துக்காவென்று வேண்டாத விகல்பத்தைச் செய்துகொண்டு லக்ஷ்மீ நாதபத்யத்தை ஓதுவதனாலேயே அர்த்த நியமம் கெட்டதென்கிறார். இதெல்லாம் ஸஹ்ருதய பரிக்ராஹ்ய மாகாததே. இருந்தாலும் அவருடைய வ்யுத்பத்தியில் பெருங்குறைகள் சொல்லி ப்ராக்ருதோக்திகளால் வாய்க்கு வந்தபடி அதிக்ஷேபிப்பது சிரோபூஷாகாரருக்கு அழகில்லை. அவ்வளவுதூரம் தூஷிப்பதற்கு இவருடைய பாண்டித்யந்தான் நிஷ்களங்கமாயிராநின்றதோ. அஷ்டகத்தின் முதல் ஸ்லோகவ்யாக்யானத்திலேயே **राघवस्यानुजन्मा रामानुजइति च पर्यायः खलु** என்கிறார். இது எங்ஙனம் ஸாதுவோ. இங்கு **इति** என்பதை முதலிலும் இழுத்துக்கொண்டு ராகவஸ்யாநுஜன்மா என்பதும் ராமாநுஜ: என்பதும் ஒரு பொருட்சொற்களன்றோ வென்று அர்த்தங்கொள்ளவேணும். அப்பொழுது 'பர்யாய:' என்ற பதம் ஏகவசநாந்தமாவதெப்படி? பர்யாயௌ என்றல்லவோ இருத்தல்வேண்டும். ஆனால் **च** என்று ஸமுதாயத்தைக் குறிப்பதால் அந்தஸமுதாயம் ஒன்றாகையால் அதற்கு விசேஷணமாகும் இப்பதம் ஏகவசநாநந்தமாகவே இருக்கலாமென்று நினைக்கலாம். அது தகாது. அப்பொழுது இவ்விரு சொற்களின் ஸமுதாயம் மற்றொன்றோடு பர்யாயமாகும் என்றுபொருளாகுமே தவிர இவை ஒன்றுக்கொன்று பர்யாயங்களென்று பொருள்படாது. மேலும்

**च** சப்தத்தால் சொல்லப்படும் ஸமுதாயமானது ஸமுதாயிக ளுக்கு விசேஷணமாகத் தோன்றுமே தவிர விசேஷ்யமாகத் தோன்றகில்லாது. ஆகையால் ஸமுதிதமான இவ்விருபதங்க ளென்றே பொருளாகும். அப்பொழுது பர்யாயபதத்தின்பேரில் த்விவசந மிருந்தே தீரவேணும். இங்கு **पर्यायः** என்ற சொல்லைத் தனித்தனியே அந்வயித்து **राघवस्यानुजन्मा इति पर्यायः रामानुजः इति च पर्यायः** என்று சொல்லி விடுகிறோமென்பரேல் அப்பொழுது **कस्य पर्यायः** என்ற கேள்விக்கு இங்கு விடையில்லை. **समभिव्याहार** பலத்தாலே பக்கத்திலுள்ள பதத்திற்கு என்றுதான் கொள்ள வேணுமென்று பிடிவாதம் செய்தால் **श्रीशैलेशाष्टकव्याख्ये** என்ற விமர்சநகாரருடைய ப்ரயோகத்திலும் இதே யுக்தியாலே **कस्य व्याख्या** என்ற கேள்விக்கு ஸ்ரீசைலேசாஷ்டகத்துக்கு என்று விடை விடுக்கலாமிறே. இப்படியிருக்க அதை மட்டும் பெருங்குற்றமாக விவரெடுத்துக் காட்டுவதேனோ. இதுபோல எவ்வளவோ தோஷங்கள் இவருடைய ப்ரயோகங்களிலும் காட்டக்கூடும். ஆகையால் யாரையும் உந்மஸ்தகமாக தூஷிப்ப தற்கு அஸ்மதாதிகள் அதிகாரியில்லையென்றே ஒவ்வோருவரும் மனதில் கொள்ளவேணும்.

இனி மற்றோன்றும் கேண்மின். இந்த பூஷாகாரர் சதுரராகை யாலே தமது சொல்லின் பாணியாலேயே பலவிஷயங்களைப் பிறர் நம்பும்படி செய்கின்றார். ஆனால் அவைகள் விஷயத்தில் உண் மையை அறிந்தவர்களும் சிலர் இருப்பார்களென்று ஆலோ சிப்பதில்லை. உதாஹரணமாக பூஷையின் முகவுரை விண்ணப்பத் தில் விச்வப்ரஸித்தவைபவரா யெழுந்தருளியிருந்த சின்னக்கலி யன் வானமாமலை ராமாநுஜஸ்வாமி, யாத்ரையடைவில் இவரைக் காணநேர்ந்தபோது ஸ்ரீசைலேசாஷ்டகத்தைக்கொண்டு மடத் துக்கு எதிராக இவர் கிளம்பியதைக்கண்டு முதலில் அதிசங்கை பண்ணினதாகவும் பின்னால் இவருடைய அந்தரங்க சுத்தியைப் பார்த்து மிகவும் அநுதபித்ததாகவும் இவரிடம் பெரிய திருவோ லக்கத்தில் அருளிச்செய்யலாயிற்றென்றும் இது கல்பனையல்ல வென்றும் திறம்படக் கூறுகின்றார். அந்த மூன்றாவது யாத் ரையில் நிழலுமடிதாரும்போல ஸ்ரீஸ்வாமியை இறையுமகலகில் லாது சுச்ரூஷித்துப்போந்த சில பெரியோர்களும் அடியேன் போல்வாரும் வர்த்தித்துவரு மக்காலத்திலேயே இக்கட்டுக்கதை

ஸம்பவத்தை இவ்வாறு வெளியிடுகின்றாரேயானால் இந்த ஸ்வாமி போல்வார் இன்னும் வருங்காலத்தில் எதையும் எவ்விதத்திலும் வெளிடக்கூடுமன்றோ.

இங்கு இவரது மற்றொரு சாதுர்யமும் கவனிக்கத்தகுந்தது. ஸ்ரீசைலேசாஷ்டகம் ரம்யஜாமாத்ருபத்யம் ஸேவிக்கப்படுவதை நிஷேதிப்பதற்காகவே பிறந்ததென்று ஏன் கொள்ளவேணும். திருமந்த்ரத்தில் உகாரத்தால் சொல்லப்படும் அந்யசேஷத்வ நிவ்ருத்தி எப்படி அபாகவத சேஷத்வத்தைத்தான் விஷயீகரிக்கின்றதோ பாகவத சேஷத்வம் எப்படி விலக்கப்படவில்லையோ அப்படியே இங்கும் **पद्यमन्यत्** என்ற விடத்தில் அன்யபதம் ரம்ய ஜாமாத்ருத் தனியனை க்ரஹிக்காது என்று ஏன் கொள்ளலாகாது என்று சொல்லி ஸ்ரீஸ்வாமி வரவரமுனி சேஷபூதர்களில் அக்ரகண்யராகையாலே அவருடைய தனியன் இங்கு நிஷேதிக்கப்படாதென்று நம்பச்செய்யப் பார்க்கின்றார்; ஆனால் எந்தத் தனியன் நிஷேதிக்கப்படுகிறதென்றும் இவர் சொல்லியிருந்தால் அழகாயிருக்கும். அது சொல்ல இயலாமையால் விட்டு விட்டார்போலும். தென்னாசார்ய ஸம்ப்ரதாயஸ்தர்களாய் மாமுனிகளுக்குப் பிற்காலத்தவரா யிருப்பவர்களடங்கலும் அவருக்கு முன்னுள்ள ஆழ்வாராசார்யர்களும் அவருகந்த விஷயமாகையாலே அவர்களில் யாருடைய தனியனானாலும் அது ஸ்ரீசைலேசபத்யத்தோடு துல்யயோகக்ஷேமமாகின்றமையால் அஃதொன்றும் இங்கு நிஷேதிக்கப்படக்கூடியதாயில்லை. வடகலை ஸம்ப்ரதாயஸ்தர்களுடையவோ அல்லது அவைஷ்ணவர்களுடையவோ தனியன்கள் நிஷேதிக்கப்படலாமோவென்று பார்த்தால் அப்பொழுது அப்ரஸக்தத்தை ப்ரதிஷேதிப்பதால் இந்த நிஷேதமே உந்மத்தப்ரலபிதமாக பவிக்கின்றது. ஸ்ரீசைலேசபத்யத்தை அவர்கள் ஓதுவதாயிருந்தாலன்றோ அதற்குப்பிறகு அவர்கள் பத்யத்துக்கு ப்ரஸக்தி வரப்போகின்றது. ஆகையால் அவர்கள் பத்யத்தையே நிஷேதிக்கிறதென்று இவர் சொல்லப்புகில் இந்த அஷ்டகம் அநபிஜ்ஞகர்த்ருகம் அப்ரமாணமென்ற வாதத்தைத் தாமும் இசைந்தவராகின்றார். இந்நிலைமையில் நிஷேத்யம் இன்னதென்று சொல்லாமல் விடுவதே சிறந்ததென்று தேறினர். என்னே இவரது திறமை.

ஆக இந்த ஸ்ரீசைலேசாஷ்டகம் ஸ்வயம் அப்ரமாணமா யிருப்பதுடன் தன்னை ஆதரிக்க வந்தவர்களையும் அப்ராமாணிகர் களாக ஆக்கவல்ல ஆற்றலுடைத்து என்பதோடு இது விஷய மான பேச்சை நிறுத்திக் கொள்வோம். இதற்கு வ்யாக்யான மருளிச் செய்த பெருமாள்கோவில் ப்ரதிவாதி பயங்கரம் ஸ்ரீ உபய. அண்ணங்கராசார்யர் ஸ்வாமி ஸ்ரீவைஷ்ணவ உலகில் ஸுப்ரஸித்தர். அவருடைய பாண்டித்யமும் அதன் பலங் களாயுள்ள ஸ்ரீஸூக்திகளும் அவைகள் பத்ரிகைகளிலும் புஸ்த கங்களிலும் படிக்கப்பட்டும் ஸபைகளில் கேட்கப்பட்டும் உலகத் துக்குச் செய்துவரும் பேருபகாரங்களும் **यदि त्रिलोकी गणनापरा स्यात्** என்ற கணக்கில் அபரிச்சேத்யங்களாகும். உதாஹரணமாக ஸமீபத்தில் கோவிந்தராஜீயத்தில் **कामानुजपरवशहृदयापि** என்று திருத்தி யோத வேணுமென்று வெளியிட்டதைப் பலரும் உகந் தார்கள். இப்படியிருக்கும் இம்மஹானுக்கும் சில விஷயங் களில் அந்யதா ப்ரதிபத்திகள் சில ஏற்படுமாகில் அவை **एको हि दोषो गुणसन्निपाते निमज्जतीन्दोः किरणेष्विवाङ्कः** என்ற ந்யாயத்தாலே கணிசிக்கக் கடவனவல்ல. அவ்விதமிருந் தாலும் ப்ரக்ருதத்தில் ரம்யஜாமாத்ரு பத்யத்தின் உண்மை நிலையை விளக்கவந்த இந்த ப்ரஸங்கத்தில் அதற்கு மாறாக கோஷிக்கின்றவர்களுக்குக் கைகொடுக்க வல்லனவான அவ ருடைய சில தோஷங்களை எடுத்துக் கூறவேண்டிய அவசியம் ஏற்பட்டதுபற்றி உண்மையில் அடியேனுக்கும் வருத்தம் மிக்கதே. என்செய்கேன் பாவியேன், இங்ஙனம் அவர் திறத்தில் பிழைக்க நேர்ந்ததைப் 'பிழைப்பராகிலும் தம்மடியார் சொற் பொறுப்பது பெரியோர் கட'னெனக் கருதி அவர் பொறுத் தருள்வாராக. ஆக இவ்வளவால் ஸ்ரீசைலேசபத்யத்துக்கு அடுத்தபடியாக ரம்யஜாமாத்ரு பத்யம் ஸேவிப்பது அழகிய மணவாளனுக்கும் அழகிய மணவாள மாமுனிகளுக்கும் அவரது அஷ்டதிக்கஜாசார்யர்களுக்கும் அத்யந்தம் அபிமத விஷய மென்றும் அவ்விதம் ஸேவிக்குமவர்களுக்கு ஸ்வாசாரத்தில் அப்ராமாண்ய சங்கைக்கு அவகாசலேசமும் இல்லையென்றும் நிரூபிக்கப்பட்டது. ருசியுடையார் அவ்விதம் ஸேவித்துக் கொண்டு அத்யந்தம் ஆசார்ய நிஷ்டர்களாய்ப் போந்து ஆத் மோர் தீதிலராகி யிங்குமங்குமெல்லா மமைவார்களாக,

श्रीवानाचलयोगीन्द्र पद्यतत्त्वविवेचनम् ।
अदसीयमिदं मोदमादधीत विपश्चिताम् ॥

यदि कोऽपि कृतिं मोहादिमामाक्षेप्तुमीहते ।
स तर्हि स्वसमारम्भवैफल्यं फलमीक्षताम् ॥

अवजानन्ति चेदेनामसूयाग्रन्थयः परे ।
परेण तेऽवमन्येरन् पुरुषेणेति मे मतिः ॥

विदुषां यदि केषाश्चित्कलुषीकुरुते मनः ।
कृतिस्तर्हि मया बद्धा नतिरद्धा प्रसादयेत् ॥

रामानुजमुनिः सौम्यजामाता च गुरूत्तमः ।
प्रीयेतामनया वाचां स्वीयेनार्पितया स्रजा ॥

श्रीमते रामानुजाय नमः ।




The Liberty Press, G. T., Madras.